அன்பு மலர்—௫




ஓம் சுத்த சக்தி

சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றிய

# இன்பமாலை



ஆன்மா வுண்மை; அதுநீ யறிவாய்.
உண்மை யறிந்தால் உலகெலா மோர்குலம்.




அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம்
திருச்சி ஜில்லா

1938


 [6 அணா

# பொருளடக்கம்

# பதிப்புரை

இறைவன் திருவருளால், எமது நிலயத்தின் 3-வது அன்பு மலர், 'இன்ப மாலை'யின் இரண்டாம் பதிப்பு வெளிவருகிறது. இதை மகிழ்வுடன் தமிழன்னையின் திருவடிகளில் வைத்து வணங்குகிறோம்.

உலகில் இன்பம் வேண்டார் யார்? அன்பு, அமைதி, ஒற்றுமை, சமரசம், வாழ்வழகு, உள்ளறிவு, உலகறிவு, கடவுட் கலப்பு—இவையெலாம் இன்பமென்ற பொருளிலடங்கும். அவரவர் உள்ளமே அவரவர்க்கு விண்ணரசு; பேரின்ப ஆற்று. அதற்குத் தெளிவான வழி காட்டும் அனுபவச் சுவடியே இந்த இன்ப மாலை.

இந்நூலாசிரியர் ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார், எல்லா மதங்களையும், எல்லாப் புனித நூல்களையும் பயின்று நின்று பார்த்தவர். பல்லாண்டுகள் தவ யோகத்திலிருந்து, ஆத்மானந்தத்தைத் தாம் முதலிற் பெற்று, அவ்வனுபவத்தை உலகிற்குச் சொல்லுகிறார். ஆசிரியரின் அனுபவ மணியாகிய இந்நூலின் ஒவ்வொரு வரியும் தியானத்திற் குரியது. இந்நூலுடன் "யோக சித்தி"யை ஓதி யுணர்க.

இக் குறுஞ்சுவடியின் முதலாவது பதிப்பை அன்புடன் ஏற்றுப் போற்றி ஆதரித்த தமிழுலகிற்கு எமது நிலயம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது. எந்தாய் வாழ்க!

அன்பை வளர்ப்போம்!

அன்புகோண் டுழைப்போம்!

இராமச்சந்திரபுரம்
15—8—38.

அன்பு நிலயத்தார்

# இன்பப் பொருள்

வந் திருந்து செல்லும் வாழ்விலே—என்றும்
வாய்மை யாக வாழும் ஒன்றேது ?
சிந்தை செய்து பார் தினந் தினம்—ஒரு
ஜீவ சாட்சி யுள்ள துன்னுளே...!
பந்த தொந்த பாச மற்றதாம்—அது
பாப புண்ய மற்ற ஞானமாம்.
அந்த மாதி யற்ற மோனமாம்—' சச்சி
தானந் தாத்மா நா'னேன் றுன்னுவாய்! 1

நாவினிற் சுவைப்ப தப்பொருள்—நம்
நரம்பினின் றுணர்வ தப்பொருள் ;
ஆவியில் உயிர்ப்ப தப்பொருள்—உள்
ளன்பினில் இனிப்ப தப்பொருள் ;
பூவினில் மணப்ப தப்பொருள்—பஞ்ச
பூதக் கூட்டில் வாழுங் கிஞ்சுகம் ;
யாவையும் படைத்த தப்பொருள்—தானுய்
யாங்கணும் நிறைந்த தப் பொருள் ! 2

கண்ணையுட் குவித்துக் காணுவோர்—அந்தக்
கரணத்துட் கலந்து காண்பது ;
விண்ணு மண்ணு மான தத்துவம்—தன்னின்
வேறிலாச் சுத்தாத்ம சத்துவம் ;
எண்ணெயுந் திரியுந் தீபமும்—அதில்
ஏறுபோற் சுடரு மானது.
நண்ணுதற் கரிய நுண்மையாம்—'அது
நான் ; என்னுள்ளத் தேன்'என்
றோதுவாய் ! 3

நம்பு நம்பு 'நான் அது' எனஅப்—பின்பு
நலிவு மில்லை மெலிவு மில்லையே !
நம்பு நான் எனக் கரசேனஅப்—பின்பு
நச்சடிமை யச்ச மில்லையே !
நம்பு 'விண் ணரசேன் உள்' எனஅப்-பின்பு
நமனு மில்லை, நரகு மில்லையே !
இன்ப வாரி யிவ்வுல கேல்லாம்—பே
ரின்ப மாலை யிங்கு வாழ்க்கையாம் ! 4

—சுத்தானந்த பாரதி

---

# அணிந்துரை

---

மகா மகோபாத்தியாயர்

## டாக்டர், உ. வே. சுவாமிநாதையர்

அவர்கள் அளித்தது

---

ஸ்ரீமத் சுத்தானந்த பாரதியாரவர்களால் இயற்றப் பெற்றுச் சிங்கப்பூர் அன்பு நிலையத்திலிருந்து வெளிவரும் நூல்களின் அருமை பெருமைகளைத் தமிழுலகம் நன்கு அறியுமாதலின், நான் எடுத்துக் கூறுவது மிகையாகும். இப்போது வெளிவந்துள்ள "இன்பமாலை" யென்னும் அருமையான நூலைப் படித்து இன்புற்றேன். "இன்பமாலை" யென்னும் பெயர் இதற்கு மிக்க பொருத்தமாகவுள்ளது.

ஒன்றிற்கு ஒன்று வேறுபாடான கொள்கைகளையுடையவாகத் தோன்றும் பல வேறு சமய நூல்களிற் காணப்படும் உயர்ந்த உண்மைகள், எளிய நடையில், மனங் கவரும் முறையில், இந்நூலில் எழுதப்பட்டிருக்கின்றன. இந்நூலின் முகவுரையே ஒரு தனி நூலின் பெருமையை

யுடையதாக விளங்குகிறது. நூலின் பொருள் உயர்ந்தது. அதை விளக்க வந்த நடையோ அழகிய சிறிய வாக்கியங்களால் அமைந்தது. இதைப் படிப்பதற்கு வேறு நூல்களோ அகராதியோ வேண்டுவது இல்லை. கையில் எடுத்து ஒரு முறை படித்தவுடன் கருத்துத் தானாகவே படிப்பவ ருள்ளத்தில் பதிந்து விடும். இம்மாதிரி எழுதுவது அருமையினும் அருமையாகும்.

இத்தகைய நூல்கள் நம் நாட்டில் பரவினால், நம் நாட்டினருடைய உள்ளம் தூய்மையுற்று, எல்லா வகையிலும் ஒற்றுமை யுண்டாவதற்கு ஏதுவாகும். ஆதலின், பாரதியாரவர்கள் இதைப் போன்ற பல நூல்களை வெளியிட்டுத் தமிழுலகம் மகிழும்படி செய்ய வேண்டுமென்று இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

---

புத்தேரிக் கவிஞர்

## திரு. S. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள்

அளித்தது

---

“ அவரவ ருள்ளமே அன்பு நிலயம்;
அவரவ ருள்ளமே ஆனந்த வூற்றும்!
ஒவ்வோ ருயிரும் உலவும் கோயில்;
தன்னை யறிந்தாற் பின்னிட ரில்லை;
தானே தனக்குத் தளையும் பகையும்;
தானே தனக்குத் தருநல மெல்லாம்;
நான் காண் மனிதன் நானல தில்லை;
ஆன்ம நானே; ஆன்மா அவனே:
ஆவிக் குயிராய் அடியனுட் கலந்தான்;
ஆவிக் குயிராய் அவனுளு முள்ளான்;
இவ்வுயிர் போலே யவ்வுயி ரேனதே;
எவ்வித பேதமு மில்லை”—எனப்பல
அரும்பெரு முண்மைகள் அநுபவ வாயிலா
யுணர்த்தி, உவமை, உதாரணம் காட்டி,
ஐயந் திரிபற அனைவருந் தெளிய
இனிய தமிழில், எளிய நடையில்
சுத்தா னந்த சுவாமிகள் தொகுத்த
‘இன்ப மாலை’ யிதனால்,
துன்பம் நீங்கிச் சுகம் பெறு முலகே!

‘இன்ப மாலை’ சிங்கப்பூர் அன்பு நிலயத்தின் மூன்றாவது வெளியீடாம். இதன் ஆசிரியர் தமிழன்னையின் தவப்புதல்வராகிய ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியாராவர். இவரது தமிழ்ப் பற்றை,

"வைதாலுந் தமிழினிலே வையுங்கள் ;
வாழ்த்தெனக் கொண் டியம்புகின்றேன்"

என்று அவர் கூறியிருக்கும் மொழிகளே நன்கு விளக்குகின்றன. உண்மையான இன்பம் இது வென்றும், அவ்வின்பத்தை அடையும் வழிகள் இவையென்றும் காட்டுவதே, இன்ப மாலையின் முதல் நோக்கமாம்.

பருவ மழை பொய்யாது பெய்கின்றது. பயிர் செழித்து வளர்ந்து நல்ல பலனைத் தரு கின்றது. விளை பொருள்களை யாரும் இறக்கும் பொழுது எடுத்துக் கொண்டு போவதுமில்லை. ஆயினும், உலகத்தில் இன்பம் பெருகி வரக் காணோம். துன்பமே நீங்காது நிலைத்து நிற்கின் றது. ஆராய்ந்து நோக்கின், இதற்கெல்லாம் மூல காரணம் மனிதன் பேராசைப் பேய்க்கு அடிமைப் பட்டுக் கிடப்பதே யாமென்பது யாவர்க்கும் எளி தில் புலப்படும். இந்தப் பேய், 'நான் வேறு,' 'அவன் வேறு' என்ற பேத வுணர்ச்சியுள்ள மட் டும் மனிதனை விட்டு மாறவே மாட்டாது. இதை வெருட்டி, ஓட்டுவதற்கு,

"நான் காண் மனிதன் நானலதில்லை !
ஆன்மா நானே; ஆன்மா அவனே :
ஆவிக்குயிராய் அடியனுட் கலந்தான் ;
ஆவிக்குயிராய் அவனுரு முள்ளான் ;
இவ்வுயிர் போலே யவ்வுயி ரெனதே ;
எவ்வித பேதமு மில்லை"

என்னும் உண்மை ஞானம் உதயமாக வேண்டிய தவசியமாம். அப்பொழுதுதான், சோந்தம், அன்னியம் என்ற மயக்கம் நீங்கும். ஆண்டானடிமைப் போராட்டம், முதலாளி தொழிலாளிப் போராட்டம், ஜாதிச் சண்டை, சமயச் சண்டை, ஊனுடைச் சண்டை, ஒற்றுமைச் சண்டை, ஆண் பெண் சண்டை, அடுக்குள் சண்டை முதலிய யாவும் ஓய்ந் தொழியும். உள்ளொற்றுமை தோன்றி உலகொற்றுமை உண்டாகும். இவ்வுண்மைகளையே நூலாசிரியர் அநுபவ வாயிலால் தக்க உவமை, உதாரணங்களைக்கொண்டு நமக்கு விளக்கிக் காட்டுகின்றார். இப்பெரியார் பற்பல சமய நூல்களையும், தத்துவ சாஸ்திரங்களையும் ஆராய்ந் தறிந்தவரென்பதற்கும், யோக மார்க்கத்தில் மிக்க பயிற்சியுடையவ ரென்பதற்கும், 'எம் மதமும் சம்மதமே' என்னும் மேலான கொள்கையை யுடையவரென்பதற்கும் போதிய சான்றுகள், இன்ப மாலையில் ஆங்காங்கு மலிந்து கிடக்கின்றன.

இந்நூல், இனிய தமிழில், எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. சொற்களும் பொருள்களும் ஒத்திணங்கி, ஓடி ஒழுகுகின்றன. இது அடிகளது நூல்கள் யாவற்றிற்கும் ஏற்பட்ட ஒரு தனிச் சிறப்பாகும்.

இவ்வித அரிய நூல்களை யெல்லாம் வெளியிடும் பணியை மேற்கொண்டு நடத்திவரும் 'அன்பு நிலய'த்திற்கு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் என்றும் உண்டாவதாக!

புதுக்கோட்டை,

மகாராஜா கல்லூரித் தமிழாசிரியர்,

## வித்துவான் நா. கனகராஜையரவர்கள்

பாடிய

# சிறப்புக் கவிகள்

---

எவ்வுயிரு முள்ளுணர்வை யெய்துநெறி
  யியன்றதுவே இன்ப மாலை;
எவ்வமறு பரம்பொருளின் மெய்ந்நிலையை
  விளக்குவதே இன்ப மாலை;
இவ்வுலகில் மதங்களினுட் கருத்தைநுனித்
  திசைப்பதுவே இன்ப மாலை;
எவ்வியலு நெறிபொருந்த ஆடியெனத்
  தெரிப்பதுவே இன்ப மாலை!

மக்கள்மன மொருவழிப்பட் டொருபொருளை
  யுணர்ந்துருகு மாபு காட்டப்
புக்கதொரு பொதுமறையே போலுமிது
  வெனப்புனைந்த புதுமைச் செய்யுள்;
இக்கதினு மிகுந்தசுவைப் பசுந்தமிழி
  னியன்றுளதாம் இன்ப மாலை,
பக்கமுறு வாதியர்தம் மயலகற்றிப்
  பொதுநெறியே பரப்புமாலோ!

பிறருணரு நெறிமயக்கே யாமுணரு
  நெறிதெளிவே பிறராய் நின்றீர்,

உறவருதிர் யாருமென வழைத்திடுவார்
தொகைசுருங்க, வுண்மை நாடும்
திறமுடைய நல்லறிஞர் குழுப்பெருக
வுரியபணி செய்ய வாய்ந்த
அறநெறிசொல் தமிழ்ப்பனுவல் இதுவொன்றே
யாகுமென அறைதல் நன்றே!

எவ்வெவர்கோட் படுபொருளு மதுவொன்றே
யறிமினெனும் இன்ப மாலை,
செவ்வியநல் லருள்நெறியை யறிவுலகு
கொளவமைத்துச் சிறுமை நீக்கி,
ஒளவியமில் உளத்தினராய் மக்களெலாம்
வாழ்புதுமை யறத்தை நாட்டி,
இவ்வுலகு பெறும்பேறு யிலங்கிடுக
தமிழ்மொழிக்கோ ரேற்ற மிட்டே!

உருவமென வருவமென வுருவருவ
முளதென்ன வுலக மோர்ந்த
ஒருபொருளை யுணருநெறிப் பன்மையினில்
மயங்காமல் ஒருமை காணத்
தருணமிது வருதிரெனப் புகலுமின்ப
மாலையெனுந் தமிழ்நூல் தந்த
பருணிதர்தம் திருப்புகழைப் பாராட்டும்
பெரும்பேறு படைத்தேம் யாமே!

சோர்வறுமா தவந்தொடங்கி மோனநெறி
கடைப்பிடித்த சுத்தா னந்த
பாரதியார் தமிழ்ப்பணியைத் தவப்பணியை
யறியாதார் யாரு மில்லை;

ஆர்வமொடு தெளிந்துணர்ந்த பொருளையருந்
தமிழ்மகட்கே யணியும் அன்னூர்
சீரியமெய் யறப்பணியைத் தமிழகத்தார்
பேறெனவே சிறக்கச் சொல்வேம்!

## வாழ்த்து

வாழிய மெய்ம்மறை வாழிய பைந்தமிழ்
வாழிய செம்மை வளர்மனமும்—வாழியரோ
ஆரிய நூல் உட்கருத்தை யாய்ந்துணர்சுத் தானந்த
பாரதியார் பாடற் பணி.

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 53 | 709 | சூட்டியும் | சூட்சியும் |
| ,, | 712 | கண்ணை | கண்ணே |
| 56 | 792 | சவத்துள்ளே | சவத்துளே |
| 58 | 826 | இப்பால்லுயிர் | இப்பாருயிர் |
| 62 | 936 | அவ்வரி | அவ்வறி |
| ,, | 949 | பார்க்கின். | பார்க்கின், |

# இன்பவழி.



## க. பறவை வாழ்வு.

இந்த மாமரம் கனிகுலுங்குகிறது; புட்கள் வருகின்றன; உண்கின்றன; காதலிக்கின்றன; கூடுகட்டி வாழுகின்றன; குஞ்சுகளை ஊட்டி வளர்க்கின்றன. அந்தியில் 'ஜிவ்வ்' வென்று பாய்ந்து பறந்து துள்ளிக்குதித்து ஆடிப்பாடிப் பரவசமாகின்றன. இரவின் மோகன மடியில் உறங்குகின்றன. மலர் குலுங்க, மணம் பரவ, மந்தமாருதக் குழலூத, காலைக்கன்னி கனிமுகங் காட்டுகிருள். புட்கள் எழுந்து உதயகானம் செய்கின்றன; கூடிப்பேசிக் குலாவுகின்றன; 'வீர்ர்' ரென்று நீலவானிற் பறந்து செல்லுகின்றன. பெயர், வடிவு, நிறம், பாட்டு, குரல், உணவு இடம் பலவிதம். இவற்ருற் சண்டை கிடையாது. மண்வெறி, மதவெறி, பெண்வெறி, பணவெறி, களால் குத்திக்கொண்டு இறப்பதில்லை. பகுத்தறிவுள்ள மனிதன் ஏன் புறவேற்றுமைகளைப் பாராட்டிச் சண்டை போட்டு மண்டையுடைகிருன்?

## ௨. உறக்கமேன்?

ஞான நூல்களும், நீதிநூல்களும், உபதேசங்களும், உபதேசியார்களும் எண்ணமுடியா. எல்லாம் கும்பகர்னனுக்கு அலாரம் வைத்த கதையாயின. மனித சமுதாயம் இன்னும், இருளில் உறங்குகிறது. சமயம், கிளைச்சமயம், குட்டிச்சமயம் ஒவ்வொன்றிற்கும், சாமி, மடம், கோயில், கொள்கை, குறி, செயல், பரிபாஷை, சாத்திரம் வெவ்வேறு. ஒவ்வொன்றிற்கும் மோட்சம் வேறு. இருக்கட்டும்; உலகம் பலவிதம். அதது அததன் இயல்வழி நடந்து அமைதியாகத் தனது இலட்சியத்தை யடைந்தாற் பரவாயில்லை. ஆகாயத்தில் எவ்வளவு நட்சத்திரக் கூட்டங்கள் உள்ளன! பேச்சு மூச்சின்றி அமைதியாகத் தமது கடமையைக் காத்துக் காலக் கோயிலை நோக்கி யாத்திரை செய்யவில்லையா? மனிதன்மட்டும் கடவுள்பெயரால் இப்படியேன் வாயாலும், கையாலும், வாளாலும் சண்டைபோட்டுத் தற்கொலை புரிந்து கொள்ளுகிறான்?

## ௩. சண்டைவேண்டாம்.

கவுடள் ஒன்று; கட்சி பல: தர்மம் ஒன்று; தர்க்கம் பல. வாய்மை ஒன்று; வாக்குவாதம் பல. சைவம், வேதாந்தம், சாக்தம், சமணம்,

பௌத்தம், ஜாரதுஷ்ட்ரம், யூதம், கிறிஸ்துவம், இஸ்லாம், எல்லாம் எதை நோக்குகின்றன? இன்பத்தை! அருட் புலவர் இன்பத்திற்கு அறவழி காட்டினர்; மனிதன் மதக்கோட்டைகட்டிச் சண்டைபோடுகிறான். ஏட்டுச் சண்டை, எழுத்துச் சண்டை, சாமிச் சண்டை. சமயச் சண்டை, பூச்சுச் சண்டை, குடுமிச் சண்டை, சோற்றுச் சண்டை, மடச் சண்டை, கோயிற் சண்டை, தீர்த்தச் சண்டை, மோட்சத்திற்குக் கூடச் சண்டை—பாராலயத்தில் ஏனிந்தச் சண்டைகள்? கடவுள் ஒருவன், உயிர்க்குயிர், அவனேகதி என்று எல்லாம் பேசுகின்றன. கடவுளை ஒப்பாத மதங்கள் 'ஆத்மா ஒன்று; அது இன்பமயம்; ஆசையாணவ மாயத்தை யொழித்தால் அதை யடைந்து சுகம்பெறலாம்; எல்லாருக்கும் அன்பாயிரு; ஒன்றையும் திட்டாதே; பகைக்காதே; வெட்டாதே, கொல்லாதே,' என்று பேசுகின்றன. நடப்பதென்ன? இத்தனை உபதேசங்களும் சந்தைக் கூச்சலுக்கு சரளிபோட்டவன் கதையாயினவே! ஏன் இன்னும் மனித சமுதாயம் இன்பத்தைக் காணவில்லை?

## ச. துன்பமேன்?

ஒரு கதை:—

மக்களுநரில் பல பல மதத்தினர்; 'எனது

கடவுளே, இன்பம் அருள்வாய்!" என்று நீண்ட காலம் அவரவர் கோயிலில் வேண்டினர். கடவுள் ஒரு மலைமீது தோன்றினார்; 'நானே, இன்பம்; எல்லாருக்கும் இன்பந் தருவேன்; ஒற்றுமையாக வாருங்கள்! அன்பாயிருங்கள்' என்றார். 'எல்லாருக்குமா? நானும் அந்த அஞ்ஞானியும் சரியா? பூணல் போட்ட நானும் தொப்பி போட்ட அவனும் சரியா? பன்னிரண்டு திருமண்சாத்திய நானும், அந்த மரக்கால் பட்டையும் சரியா? கடவுளே உமக்குத் தாரதம்யம் தெரியவேண்டாமா? நான் வெளுப்பு, அவன் கறுப்பு, இவன் பழுப்பு, அதோ அவன் மஞ்சள்; எப்படி ஒன்றாக முடியும்?' என்றனர் சாதிப்பித்தரும் வர்ணமித்திரரும். 'அன்பிருக்குமிடம் யானிருப்பேன். ஒத்தால் இன்பம்; பகைத்தால் துன்பம். சாதிமதச் செருக்குள்ள மட்டும் இன்பம் வாராது!" என்று மறைந்தார் கடவுள்!

பாருங்கள், வானம்பொழிகிறது. நிலம் விளைகிறது. உழைப்பிருந்தால் பிழைப்புண்டு; செழிப்புண்டு. எனினும் பஞ்சம், வறுமை, போட்டி, பொறாமை, சோற்றுச் சண்டைகள் மனித ஜாதியைக் கொல்லுவானேன்? பாம்புக் கலியாணத்திற்குத் தேரை இலைபோட்ட கதையாகிறது, மனிதரின் வாணிபச் சூட்சி. பாகம் உனக்கு, பத்திரம் எனக்கு; மரம் உனக்கு,

பழம் எனக்கு; நிலம் உனக்கு நெல் எனக்கு; பாடு உனக்கு, பண்டம் எனக்கு. என்ற மாதிரி மனிதவுரிமையைப் பேராசை பிடுங்கித் தின்கிறது. உதட்டிலே ஐயர்வாள்; வயிற்றிலே அரிவாளாயிருக்கிறது மனிதர் உறவு. சபையிலே சமாதானம், நகரிலே குண்டு, பீரங்கி.

ஒரு சமயம் பல நாட்டார்கள் கூடி சமாதான தேவதையை வேண்டினர். தேவதை அசரீரியாகப் பேசினாள்:- 'நல்லது, சமாதானந் தருவேன்; ஆனால் அவரவர் அவரவர் நிலத்தைச் சாத்துப் பிறர் பொருளுக்குப் பேராசைப்படாதிருப்பீர்களா? உங்கள் பீரங்கிகளைக் கடலில் எறிவீர்களா? உள்ளதைக்கொண்டு உழைத்துப் பிழைப்பீர்களா? ஒருவரையொருவர் பகற்கொள்ளை யடிக்காதிருப்பீர்களா?' என்று கேட்டது. 'நல்ல சாமியடா நீ! என் பீரங்கியிற் கையை வைக்காதே. சுட்டுப் போடுவேன். பெண்ணும் மண்ணும் பொன்னும் கொடுத்தால் நல்சாமி. உலகை வெல்ல உள்ளந் துடிக்கிறது. ஆயுதங்களைக் கடலிற்போடச் சொல்லுகிறாயா? எனது நிறமென்ன, மூளையென்ன, நாகரிகமென்ன? அந்தக் காட்டுமிராண்டியுடன், இந்த அஞ்ஞானியுடன், அதோ என்னுடன் போட்டி போட்டுக் கப்பல் வியாபாரம் நடத்தும் அவனுடன் எப்படி அன்பாக வாழுவேன்? தேவதையே எல்லா

நாடும் எனது நாடு; எல்லாரும் எனது அடிமைகள்; ஆனால் சமாதானப் பேச்செடு; இல்லாவிட்டால் கிட்ட வராதே!" என்றான் ஆகாசகுண்டன். 'அன்பும், அகமகிழ்வும், நீதியுமில்லாத இடத்தில் அமைதி வாராது. இரத்தங் கலந்தால் இரக்கம்; இரத்தம் கொதித்தால் யுத்தம், துக்கம்! ஒன்றுபட்டால் உபகாரம்; வேறுபட்டால் விவகாரம். பாம்புச் சவுக்கால் சிங்கத்தை யடக்கிச் சவாரி செய்தாலும் ஆசையானவத் திமிர் பிடித்தவன், அமைதியாக அரசாள முடியாது,' என்று சமாதான தேவதை சென்றாள்!

சாமிப் பஞ்சமில்லை; சமயப் பஞ்சமில்லை. நிலப் பஞ்சமில்லை. நீர்ப்பஞ்சமில்லை. மடமையும் வறுமையும் உலகை ஏன் வாட்டுகின்றன? ஒன்றில் கூடிவாழத் தெரியாததால், உள்ளொற்றுமை யில்லாததால், தன்னலப் பேயின் தாண்டவத்தால், ஆசையானவத் திமிரினால்—மனிதன் அல்லற்படுகிறான்.

## ரு. தருமதேவி.

கடவுளே உன்னைத் தொழுகிறேன், அழுகிறேன்; தூபம் போடுகிறேன், தானம் செய்கிறேன்; எனது பக்கத்திலிரு; என் குண்டுக்கு

வெற்றியளி என்கிறான் மண்வெறியன். முகத்திலறைந்து முத்தங்கொடுப்பது போலிருக்கிறது இத்தொழுகை. தலையைவெட்டி மயிர் தானம் செய்வதுபோலிருக்கிறது இந்த ஈகை. வழிபட்டாலும் வாள்வெறி சுகிக்குமா! தேனில் ஊறினாலும் எட்டி இனிக்குமா? 'மன்னர்களே, மனிதரை மனிதராக மதித்து ஆளுங்கள்; அறக் காவலர்களாயிருங்கள்; அரசும் செல்வமும் காலநதிக்கரையிலுள்ள களிமண் மண்டபம் என்று நினையுங்கள்! உள்ள மட்டும் உண்மையாயிருங்கள்! உலகில் அன்பைவளருங்கள்!', என்கிறாள் தருமதேவி! யார் கேட்பது?

## ௬. சந்தேகம்.

'என் கோழியாலேதான் பொழுது விடிகிறது,' என்று தனிமனிதன் அகந்தையிருள் தம்பட்டமடிக்கிறது. முள்ளில்லாத ரோஜா இல்லை; சள்ளையில்லாத சமயமில்லை. ஒவ்வொன்றும் தனக்கே மோட்சம்; மற்றவர்களுக்கு நரகம் என்கிறது. சாதி மதங்கள் பெருக்கிய இரத்த வெள்ளத்தைக் காண்பவருக்குப் பல சந்தேகங்கள் உண்டாகின்றன. கடவுள் உண்டா? இருந்தால் ஏன் அவர் பெயரால் இத்தனை சமயச் சண்டைகள், போர்

கள்? சாமி மதத்தை உண்டாக்கிரை? இல்லை. மதம்,சாமியின் பெயர் வடிவின்மேல் மனிதன் பூசிய முலாம். சாமி ஒன்ரு, பலவா? பலவாஞல் எந்தச்சாமி பெரிது? ஒன்ருஞல் பல சாதி சமயமேன்? ஏன் எல்லாரும் ஒரேசாமியுடன் கலந்து வாழக்கூடாது? மதம் அவசியமா? எல்லாருக்கும் பொதுவான தருமம் உண்டா? மனிதன் எப்படியிருந்தால் ஒரு குலமாக வாழலாம்? எதனுல் சண்டை சச்சரவுகள் ஒழிந்து அன்புபெருகும்? கோயில், குளம், தீர்த்தம், கதை, புராணம், வேதம், ஆகமம், சடங்குகளுக்குப் பஞ்சமில்லையே! ஏன் மனிதன் இவ்வுலகில் இன்பமாக வாழ முடிய வில்லை? என்ற கேள்விகள் இயல்பாக உதிக்கின்றன.

## எ. அகண்ட சக்தி

ஆணவச் செருக்கு 'பார் என் மூளைத் திறத்தை; ஐந்து மைல் மேலே ஏறிப் பேசுகிறேன்' என்கிறது! 'அப்பனே உனக்கு மேல் பரந்துவிரிந்த ஆகாயம் உள்ளதைக் காணுயா? உனக்குமேல் பருந்தும் பறக்கும்' என்கிறது அடக்கம். 'பார் நான் பூமியைக்கட்டி யாளுகிறேன், எனக்குமேல் யார்உண்டு?' என்கிறது ஆணவம். 'ஐயாவே ஆகாயத்தில் பார்;

எண்ணமுடியாத விண்மீன்கள் உள்ளன. ஒவ்வொன்றும் சூரியன். அதைச்சுற்றி எத்தனையோ உலகங்கள் உருளும். அப்படிப்பட்ட உலகக் கூட்டத்தில் இவ்வுலகம் ஒரு அணுவுக்குச் சமானம். அந்த அணுவில் ஒரு துனி உனது அரசு. ஏன் பெருமை பேசுகிருய்? அண்டாண்ட கோடிகளையும் நடத்தும் ஒரு சக்தியுள்ளது. அதன் முன் உனது அதிகாரம் எந்தமட்டு?' என்கிறது அடக்கம். 'என் புகழ் பரவுகிறது பார்' என்கிறது ஆணவம். 'அப்பனே உன்னைவிட சூரியன் கதிர் எங்கும் பரவி, உலகையே தாங்குகிறது பார்? ஆனல் அது உன்னைப்போல் அகந்தை பேசவில்லை', என்கிறது அடக்கம். இயற்கையின் அற்புதங்களையும், கடல், மலை, விண், மதி, கதிர், மலர் பறவைகளின் தோற்றங்களையும் உற்றறிந்தால், இவற்றையெல்லாம் இயக்கும் ஒரு சக்தி உண்டெனக் காணலாம். அந்த சக்தியின் அற்புதங்களை நினைத்தால் மனிதனின் ஆணவம் தலை குனியும். கரியும் இரும்பும் சேர்த்து மினுக்கு வைரம் செய்கின்றனர். அது இயற்கை தரும் வைரத்திற்குச் சாமானமாகுமா? கோடி மின் சார விளக்கெரிந்தாலும் சூரியனுக்கு ஈடாகுமா? நீர்க்காற்று இரண்டு பங்கு உயிர்க்காற்று ஒரு பங்கு ($H_2O$) எவ்வளவு சேர்த்தாலும் வான் மழைக்கு ஈடுகட்ட முடியுமா? விமானமேறி விண்ணைத்தாவ முடியுமா? படிகொண்டு கடலளக்கமுடியுமா? நமது மனத்திற்கு எட்

டாத ஒரு சக்தி உலகை நடத்துகிறது. இதை அனைவரும் ஒப்பியேதீர வேண்டும்.

## அ. ஆன்மா.

அந்த சக்தி உண்டு; யோகிகள் உணர்கிறார்கள். அந்த சக்தியையும் இயக்கும் ஒரு சுத்த சக்தி உண்டு. அதையே சாமி, கடவுள், அல்லா, பிரம்மம் என்கின்றனர். வானத்தில் சூரியன் உதிக்கிறான். அவன் கதிர்கள் ஒளி வீசுகின்றன. கடல் ஆவியாகிறது; மேகங்கள் உண்டாகி மழை பொழிகிறது. பயிர் விளைகிறது, உயிர் செழிக்கிறது. பல தொழில்கள் நடக்கின்றன. அத்தனைக்கும் காரணம் கதிரொளி. அத்தனைக்குள்ளும் கலந்தது கதிரொளி. அப்படிக் கலந்தும் தான் தனியே ஆகாயத்தில் இருந்தபடியே இருக்கிறது. அது போலவே சுத்த சக்தி அகண்ட சேதனமாக, அறிவாக எங்கும் பரவியுள்ளது. ஒவ்வொருவரும் அதன் கோயில்களே. ஒவ்வொருவர் உள்ளத்தும் அதுவே ஆன்மாவாக உள்ளது: வாழ்வின் அடிப்படை அதுவே. நீர் கடவுளை ஒப்பினாலும் சரி, ஒப்பாவிட்டாலும் சரி: மதங்களை மதித்தாலும் சரி, விடுத்தாலும் சரி; உம்மிடம் குடிகொண்டிருக்கும் உயிருக்குயிரான ஆன்மாவைப் பிரியமுடியாது. நீர் அதை அறிந்தாலும் சரி, அறியாவிட்டாலும் சரி; அது உமது உள்ளத்தில் உள்ளது. உமது வீட்டுக்குள் ஒரு புதையலுள்ளது; உமக்கே தெரியவில்லை!

இடம் பார்த்துத்தோண்டினல் அகப்படும். உமது உள்ளத்தில் ஒரு பரம சுகப்பொருள் உள்ளது. உள்ளே ஆழ்ந்து தியானித்தால் அது உணர்வாகும். இதைப் பரம நாத்திகனும் மனங்குவிந்து காணலாம். இப்பொருளை உள்ளே கண்டால் ஒவ்வொருவருள்ளும் அந்தப் பொருளே, ஒவ்வொருவரும் அந்த ஆத்மாலயமே என்று உணரலாம். அப்போது எல்லாரிடமும் பேரன்பு பிறக்கும். ஒற்றுமை உண்டாகும். எல்லாவுடலும் இறைவனுலயமே என்னும் விசுவ சேதனம் (Cosmic consciousness) உண்டாகும். 'ஒவ்வோருள்ளத்திலும் நான் ஆத்மாவாக உள்ளேன்' என்கிறுன் இறைவன்.

## க. உபநிஷத்துண்மை.

அந்த ஆத்மாவை அறிந்துதான் நமது பாரத மகரிஷிகள் உபநிடதம் பாடியிருக்கின்றனர். மற்றப் புராணங்களைப்பற்றி நமக்குச் சந்தேகமிருக்கலாம். முற்றிலும் சுயநலமின்றி, பெயர் புகழைக் கூடக் கருதாத மஹாத்மாக்களான மஹரிஷிகள் அருளிய உபநிஷத்தில் நமக்குச் சந்தேகமில்லை. அவை முற்றிலும் உண்மை. கடவுள் ஒருவன்; எங்கும் உள்ளவன்; ஒவ்வொருவருள்ளும் அவனே ஆன்மா! ஒவ்வொன்றின் உயிரும், உண்மையும் அவனே! உடல்கொண்டு உலாவுவோன் அவனே! ஆகலால் அனைத்துயிர்களும், எவ்வித வேறுபாடுமின்றி, அவனில் ஒன்று. அவனை வேதம் 'அது'

என்னும்; அன்பன் அவன் என்பான். சாக்தன் சக்தி என்பான். சைவம் மூன்றையும் சம்மதிக்கும். அந்த ஒன்றே பலவானது; அதையறியாதவர்கள் சண்டைபோடுகின்றனர். அந்த ஆத்மாவைப் பிரித்து உலகை நோக்கினால் பகையும் சண்டையும் கவலையும் மடமையும் வலுக்கும். அன்னியம் என்னினால் அச்சமும் துயரும். அவன் புருஷன்; ஜீவாத்மா. எனக்குள்ளே யுள்ள அந்த ஆத்மாவே சூரியனிலும் உள்ளான் உண்மையறிவாளிக்கு எல்லாம் ஒருமயம்; தானான ஆன்மாவே அனைத்தும். இந்த ஆன்ம ஒருமையை எங்கும், எல்லாரிடமும் காணும் அறிவாளிக்கு அச்சமேது, மோகமேது? அந்த ஆத்மாவை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகும் ஏனெனில் அதுவே அறிவு; அதுவே அறிவின் எல்லை. உலகம் ஆத்மமயம். அந்த ஆத்மா நீ; (தத்வமசி) என்று உபநிடதம் முறையிடுகிறது.

எங்கும் தானாய், எனக்குள் இன்பமாய், அனைவருள்ளும் அதுவாய், நின்று விளங்கும் பரமசுகப் பொருளான இந்த ஆன்மாவைக் காணவேண்டும். என் வீட்டில் நவநிதிச் சுரங்கத்தை வைத்துக் கொண்டு பிச்சையெடுக்கலாமா?

## ௰. தத்வமஸி.

கடவுளரசு உமக்குள் உள்ளது (The Kingdom of God is within you), நீங்கள் கடவுளர் (Ye

are Gods) என்கிறார் ஏசுநாதர். தத்வமசி (அது நீ, சாமி நீ) என்கிறது பாரத தர்மம். நீர் இந்துவானாலும் சரி, வேறெந்த மதத்தினராயினும் சரி, மதமற்றவராயினும் சரி, கேளும். சாதி மதம் சாத்திர கோத்திரங்களைப் பற்றிக் கவலையில்லை. பகுத்தறிவோடு வரலாம். வேதரிஷிகள் சங்கரர், இராமானுஜர், வியாசர், ஏசுநாதர், சுகர், ஆழ்வார், நாயன்மார்கள், வள்ளலார், பரமஹம்ஸர், விவேகானந்தர், ராமதீர்த்தர், ரமணரிஷி, அரவிந்தர் போன்ற ஆத்ம ஞானிகளின் அனுபவ மொழிகள் பொய்யல்ல. வேட்ஸ்வொர்த், பிரௌனிங், கார்லைல், எமெர்ஸன், விட்மென், பெர்க்லி, ஹெஜெல் காந்தே தோஸன், மாக்ஸ்முல்லர் போன்ற வெண்ணறிஞர் ஆத்மஞானிகள். இந்த தெய்வீக ஆன்மா மனைவி, மக்கள், செல்வம் எதனினும் அருமையானது. அனைத்தினும் அது நமக்கு நெருங்கியுள்ளது. அது நாமே; நாமே அது. 'ஒவ்வொருவரும் இந்த ஆத்மாவையே அருமையாக வழிபடவேண்டும். உயிர் அதன் உடல்; ஒளி அதன் வடிவு; உண்மை அதன் குறிப்பு; அது எங்குமுள்ளது: என் உள்ளத்தில் உள்ளது—அது ஆன்மா, அது இதயக்கனல்' என்று உபநிடதம் முறையிடுகிறது. இந்த ஆன்மாவை அப்பர் உள்ளமே என்றார்.

## ௰௧. ஒருமைப்பாடு.

மனங்கள் பல, மதங்கள் பல, மனிதர் பல; அனைவருள்ளும் ஆன்மா ஒன்று. நதிகள் பல;

கடல் ஒன்று. படித்துறைகள் பல; குளம் ஒன்று. மரங்கள் பல; தோட்டம் ஒன்று. கிளைகள் பல, மரம் ஒன்று; நட்சத்திரங்கள் பல, ஆகாயம் ஒன்று. இவ்வாறு சுற்றிலுமுள்ள இயற் பொருள்களை நோக்கினல், பலவாகக் காண்பது ஒன்றில் ஆதாரப் பட்டிருக்கும். கதிர்கள் பல; கதிரவன் ஒன்று. அதுபோல உடல்கள் பல, உள்ளான்மா ஒன்று. அதுவே வீரரில் வீரம், அறிஞரில் அறிவு, காதலரில் காதல், சித்தரில் சித்தி; அதுவே வாழ்வின் ஊற்று; எல்லாருள்ளும் அதுவே இருந்து இயங்குவதால், அதுவே ஒற்றுமைக்கு அடிப்படை. மனங்குவிந்து, உள்ளத்தில் ஊன்றி தியானித்து, யோகிகள் ஆன்மாவை அடைகின்றனர். எல்லாரும் அதை அடையவேண்டும். மூச்சு இயல்பாயிருப்பது போல ஆன்ம வுணர்வும் இயல்பாக வேண்டும். உள்ளே கண்டால் உலகில் அதுவே. அப்போது சாதிமத வேறுபாடின்றி ஆன்மகோடிகளை ஒரு குலமாகக் காணலாம். உள்ளும்புறமும் அதையடைந்து, உலகமே ஆன்மாலயமாகவும் மாந்தரெல்லாம் அத்யாத்ம சித்தராகவும் வாழும் வழியை, இன்பமாலை விளக்குகிறது.

## ௰௨. சுத்தான்ம சித்தி.

ஆன்மா சுத்தம். எல்லா மதங்களும் சுத்த நிலையையே முடிவாகக் கொண்டன. ஆன்

மாவை அடைதற்கு சுத்தமே வழி. மனம் மாசற்ற கண்ணுடிபோலானுல் அதில் ஆன்மா நிலவும். ஆத்மசித்திக்குப் பல ஸாதனங்கள் உண்டு, சிலர் கடுந்தவ விரதங்களால் அடைவர். சிலர் காணும் உலகை 'அல்ல' என்று ஒதுக்கி 'நானுர்' என விசாரித்து 'நான் ஆன்மா' என்ற முடிவிற்கு வருவர். சிலர் பேரன்பால் கடவுட் கலப் பெய்துவர். எல்லாப் பாதைகளுக்கும், மதங்களுக்கும் அடிப்படையான கொள்கைகள் சில உண்டு. அவை மனுேவாக்குக் காய சுத்திக்காக ஏற்பட்டன. அன்பு, உறுதி, மெய் யறிவு, உட்களிப்பு, தைரியம், கற்பு, ஸம நோக்கு,—இவை மனத்தைச் சுத்தமாக்கும். ஆசைவெறி—வஞ்சம்—பொருளையற்ற பொய் யுரை, வீண்பேச்சின்மை, மௌனம்—இவை வாக்கு சுத்தம் தரும். ஒரு யோக்கியமான உழைப்பால் பிழைத்தல், நேர்மை, அருட்பணி, உடலுறுதி, நல்லுணவு, தூயவுடை—முதலியன தேக சுத்தமாகும். இவ்வாறு முத் தூய்மை பெற்றவர் சுத்த மனமெய்துவர். வீச் சிலும் பூச்சிலும் வேற்றுமையிருக்கலாம். அன் பும் தூய்மையும் அனைத்திலும் ஒன்றே. சுத்த மனதால் ஆசையாணவ மாயத்தளைகளினின்று சுதந்திரம் பெறலாம். இந்தச் சுதந்திரத்தால் 'நான் ஆன்மா; எனக்கு, பந்தமில்லை; ஆன்மா என்னுள் உள்ள கடவுள்' என்னும் அறிவு பிறக்கும். இவ்வறிவால் ஆத்ம ஸமத்வம் உண்டாகும். அதனுல் 'நான் ஆத்மா; உலகில் உலாவும்

உயிர்களும் ஆன்மத் தொகுதியே; நான் நடமாடுங்கோயில்; என்னைச் சுற்றியுலாவும் உயிர்களும் நடமாடுங்கோயில்கள்' என்ற அஹமாத்ம, சர்வாத்ம ஞானம் சித்திக்கும். இதுதான் சுத்தான்ம ஒருப்பாடு. இதில் நிலைத்து ஜீவன் முக்தனாக, சுத்த முக்த ஸமத்வ சித்தனாக வாழுவதே சுத்தான்மசித்தி. அந்நிலையில் வெளித்தோல் விகாரங்களால் மனம் மாறுபடாது; சாதி, நிறம், மதம், நாடு, முதலிய வேறுபாடுகளின்றி யாதும் கோயில், யாவரும் ஆன்மா என்ற உயர்ந்த சுத்த ஸமதர்சனமுண்டாகும். பிறகு சாதிமத விகாரங்களுக்கே இடமிராது.

இந்த ஆன்ம விளக்கத்துடன் நம்முள் ஒரு சக்தி உணர்வாகும். அதுவே சுத்த சக்தி அல்லது ஆத்ம சக்தி. அதற்கு அளவற்ற ஆற்றலுண்டு. நெபோலியன் பீரங்கிமதம் வாதர்லூவில் (Waterloo) வீழ்ச்சி பெற்று ஹெலனுவில் சிறைப்பட்டிறந்தது. ஏசுநாதரின் ஆத்ம சக்தி சிலுவையேறியும் சிரஞ்சீவியாக வாழுகிறது. சிவாஜியின் கூரிய வாளைவிட புத்தரின் சாந்தப் புன்னகைக்கு சக்தி அதிகம். கலிங்கப் போர்வீரனான குலோத்துங்கன் ஈட்டியை விட, வள்ளலாரின் அருட்பாவிற்கு சக்தி அதிகம். மூளைவலிவால் முரட்டு விலங்குகளை மனிதன் அடக்குகிறான். மூளையைவிட புத்திபலம் அதிகம்; அதைவிட ஆத்மபலம் ஆயிரம்

மடங்கு அதிகம். இந்த சுத்தான்மக் காட்சியும், சுத்தான்ம சுதந்திரமும், சுத்தான்ம ஸமத்வமும் சுத்தான்ம சக்தியும், நேயமும், சிலயோகிகளுக்கு மட்டுமல்ல; ஆண் பெண் அடங்கலுக்கும் எய்தவேண்டும். 'உலகில் ஒரு ஆண் ஒரு பெண் இந்த சுத்தான்ம சக்தியின் பத்தை இன்னும் பெருவிடின் எனக்கு முக்தியில்லை, இன்பமில்லை. நான் ஆத்ம பரிபூரணம் பெறுவது முதல்வேலை; என்னைச் சுற்றிலுமுள்ளவர்களுக்கு அந்தப் பரிபூரணத்தை அளிப்பது இரண்டாவது கடமை,' என்று ஒவ்வொருள்ளமும் உணர்க. சுத்தான்ம தர்மஸாதனம் அனைவருக்கும் பொது. அனைவருக்கும் உரிமை. சாதிமத விகாரங்கள் அதன் கிட்ட வரக்கூடா.

## ௰௩. ஸாதனம்.

சொல்ல வேண்டியதைச் சொல்லியாயிற்று; செய்யவேண்டியதென்ன? சாதிமத வேறுபாடுகளை மனத்தினின்றும் ஒழி. 'சாதி, மதம், நிறம், நாடு என்ற வேறுபாடு எனக்கில்லை; நான் சுத்தான்மா' என்று எப்போதும் கருது. இவ்வுடல் அந்த சுத்தான்மாவின் மாளிகை, கோயில், எனக்கருது. தூசி அழுக்கு தியசிந்தனையின்றிக் கோயில் புகுவதுபோல இந்த ஆத்மாலயத்தில் மனமாயம், மடமையிருள், சினவெறி, மோகப்பேய், சுயநலம் புகாமல் கவனமாயிரு. உள்ளே ஆத்மராஜன்

உள்ளான். எந்த நினைப்பு உள்ளே புகுந்தாலும், 'நீ யார்? நண்பனா, பகைவனா?' என்று கேள்; தீய எண்ணமானால் திருப்பி விரட்டு. நல்லதானால் உள்ளே வரட்டும். கண்ணுக்கு இமைகாவல்; தனக்கு அறிவே காவல். அதிகாலை எழுந்து தேகசுத்தி செய்துகொண்டு, குளித்துத் துவைத்து உடுத்தி, பரிசுத்தமாக, எக்கவலையுமின்றி, ஒரு தூயதனியறையில் அல்லது இயற்கையழகின் முன் பத்மாஸனத்தில் உட்காரு. தலை, கழுத்து, மார்பு, நேராயிருக்கட்டும். உலகம் முழுதையும் ஒரு கோயிலாக பாவித்துக்கொள். சூரியன் அக்கோயில் விளக்கென்று நினை. உன் உள்ளம் அக்கோயிற் சந்நிதி யென்று கருது. அந்த சந்நிதியில் ஒளிவடிவாக ஒரு சக்தி கனலுவதாக தியானி. அது மன விகாரம், இன விசாரம் அற்ற பரிசுத்தமான பொருள். அதுவே நான்; அதுவே எனது இஷ்டதேவதை; அது சுத்தம்; அதன் வடிவு சக்திக்கனல் என்று தியானி. பந்த தொந்தங்கள் எனக்கில்லை; நான் இந்த சுத்தன், சுதந்திரன், ஆத்மஸமத்வன் என்று சிந்தி. மனத்தை வெளியே சிதறவிடாதே. எண்ணங்கள் அலைவீசும்; உறுதியைச் சந்திக்கிழுக்கும். பேய்க்குரங்கு போல மனம் துள்ளும்; அசையாதே. இதெல்லாம் உனக்குப் புறம்பே நடப்பது; உனக்குச்சம்பந்தமில்லை என்று உறுதியாயிரு; உள்ளத்தையே பார். அதைரியப்படாதே.

நாளடைவில் மனம் நிலைக்கும்; புயல் அடங்கும். ஒரு அமைதி பிறக்கும். அறிவு கனலும். வருஷக் கணக்காக யோகிகள் தவஞ்செய்து இந்த சுத்தான்மசித்தி பெறுகின்றனர். இன்னும் எனக்கு வரவில்லையே என்று அதைரியப் படாதே. தினம் இவ்வாறு காலை அரைமணி நேரம். அந்தியில் அதேமாதிரி பரிசுத்தமாக அரைமணிநேரம் தியானி. அப்போது வேறு வேலை, சிந்தை வேண்டாம். தூய அன்பர் பலர் கூடி இவ்வாறு தியானிக்கலாம். இல்லறத்தார் தங்கள் மனைவி மக்களுடன் தியானித்தல் நல்லது. மனைவி கணவனை சிவாம்ஸமாகக் காணுக: கணவன் மனைவியை சக்தியாகக் காணுக. குழந்தைகளை முருகன், கண்ணன், வள்ளி, திருமகளாகக் காண்க. நாளடைவில் மன விகாரங்களும் விகற்பங்களும் ஒழிந்து, தூய சிந்தனையும், ஆன்மவுறவும் ஆன்மக்கலப்பும் உண்டாகும். இதைப்பற்றிய சாதனங்களெல்லாம் **யோகசித்தியிற்** காண்க.

## ௧௪. தியான மந்திரம்.

மதோபதேசங்களைவிட இந்த தியானம் ஆயிரம் மடங்கு மேல். இந்த ஒரு மணிநேரம் உளங் குவிந்திருந்து மீதி நேரத்தில் உனக்குரிய தொழிலை கவனிக்கலாம். நாளடைவில் எத் தொழிலைச் செய்தாலும், எங்கிருந்தாலும்

உனது சித்தம் ஆன்மாவிலேயே நிலைக் கொண்டு அதையே பற்றி நிற்கும். பிறகு உலகின் முக்குணப் போராட்டங்கள் உன்னைப் பற்ரு. உன்னுள்ளமே திருவாசகமாகும்; வேறு உபதேசங்களுக்குத் தேவையிராது. இவ்வாறு ஒவ்வொரு ஊரிலும் அன்பர் கூடி ஒரு மணி நேரம் சுத்தான்ம தியானம் செய்யவேண்டும். ஒரு பெரிய தோட்டத்தில் தியான மந்திரம் அமைக்கவேண்டும். சாதி மதவேறுபாடின்றி யாரும் அங்குவந்து குளித்து, உடுத்தி, கூடி தியானம் செய்யலாம். தியான மந்திரத்தில் பளிச்சென்று வெளிச்சம், புதிய மலர்கள் இவைதான் இருக்கலாம். வேறு படம், உருவம் வேண்டாம். அவரவர் உள்ளத்தையே கோயிலாகவும், அதிலுள்ள சுத்தான்ம சக்தியே கடவுளாயும் தியானிக்கவேண்டும். ஆன்மக் கோயிலின் விரிவே உலகாலயம் என ஒவ்வொருவரும் கருதவேண்டும். இந்த ஸாதனம் இயல்பானல் மற்றப் பேரின்பச் செல்வங்களெல்லாம் தம்மால் வந்தெய்தும். இந்த சுத்தான்ம பரி பூரணத்திற்கே இன்பமாலை வழிகாட்டுகிறது. அன்பர் ஒவ்வொருவரியையும் அமைதியாகச் சிந்தித்த றிக பழுக்கப் பழுக்கப் பழுது நீங்கும்; உள்ளும் புறமும் ஒரேயினிப்பாம்!

ஓம் சுத்தசக்தி.

சுத்தானந்த பாரதி.

ஓம்

சுத்த சக்தி!

---

# இன்பமாலை.

## இன்பச் சுரங்கம்.

ஆன்மா யானென் றறிவா யின்பத்
தேனா றாகக் செழித்திடும் வாழ்வே!
அன்பிளம் பிஞ்சே, யார்வக் குஞ்சே!
இன்பப் பொன்விதை யிருக்குதுன் னுள்ளே.
இதயச் சுரங்கத் திலங்குது செல்வம்.
சிதைவற முயன்றுட் புதைபொருள் காணாய்.
பொருளைப் புதைத்தது பொய்ம்மன மெழுக்கு
அருளைத் தூண்டி யதனை யுருக்காய்.
அன்புறக் கடைந்தால் அருளனல் பிறக்கும்.
துன்பக் காட்டைத் தூருட னெரிக்கும்.
இதுவது வெனநீ யேங்கித் திரியேல்.
பொதுப்பொரு ளொன்றே பொருந்துக வுள்ளே.

## உபாசனை.

பாரெலாங் கோயில்; பலபெயர் வடிவாம்
ஆருயி ரெல்லாம் ஆண்டவன் மேனி.

உடலெலா மிறைவன் நடமிடுங் கோயில்.
கடமெலாஞ் சித்தா காச நிறைவு.
உள்ளதொன்றென்னும் உறுதிபூண்டிருப்பாய்.
ஒள்ளிய ஆன்ம வொருப்பா டுதிக்கும்.
சிவனே சக்தியோ திருவளர் முருகனே,
அவனவ ளதுவென் றறிஞர்கண் டடங்கிய,
பொருளெலா மொன்றே; அருளினால் விளங்கும்.
இருளெலா மனத்தின் இருவிகற் பாட்டம்.
உருவைப் பணியினுங் குருவைப் பணியினும்,
அருவையுள் ளுணர்கினும், ஆம்பயன் ஒன்றே.
கன்மன முருகிற் பொன்மன மாகும்.
பொன்மன மாயிற் பொன்னுட லாகும்.
புருவ மத்தியிற் பொலிபூஞ் சுடரை
முருக னென்றனர் முத்தமிழ்ப் புலவர்.
குண்டலிக் கனலே குமுறும் வடிவேல்.
மண்டிரு ளானவ மாயமே யரக்கன்.
இதயக் குகைக்குள் இலங்குவான் குகனே.
உதயக் கதிர்போல் ஒளிருவ னங்கே.

## அழிவறுமான்மா.

அழிவறா நிலைப்பதி யாதென வாராய்;
அழிவை விலக்கித் தெளிவைப் பற்றிநில்.
இறப்பதும் பிறப்பதும் இவ்வுடல் வினையே.
இறப்பதும் பிறப்பதும் இருவினைத் தீர்வை.
இருவினை விலகிற் கருக்கணக் கொழியும்,
திருவினை முயன்றால் தீவினை தீரும்.
இவ்வுட லெதனால் இயங்குவ தாமோ,

அவ்வரும் பொருளே யான்மா வென்பர்.
யாக்கைச் சட்டை யணிந்தவ் வொன்றே
பார்க்கப் பலவாய்ப் பாரினி லுலவும்.
பெயர்வடி வத்தோல் பிரித்துளங் காணின்
துயர்வினை யற்ற சுகக்கனி யொன்றாம்.
உண்ணுக வதனை யுயிருள மினிக்கும்.
உண்ண வுண்ணப் பொன்னு முடலும்.
அழிவழி யாமை யறிவறி யாமை
பழிபழி யின்மை பயன்பய னின்மை
யாதென வுள்ளே யாராய்ந் தறிவாய்.
சோதனை செய்தே தூயன கொள்வாய்;
யாக்கைச் சட்டையுள் அழிவறு மான்மா
தாக்கற நிற்குஞ் சாட்சியென் றறிவாய்;
மாறுமிவ் வுலகம்; மாறுமிவ் வுடலம்;
மாறான் பேரான் மாயான் ஆன்மா;
வாளுந் தீயும் வலிவுறத் தாக்கினும்,
மாளா திந்த மன்னுயி ரான்மா.

## ஆன்ம சுதந்திரம்

அதுதான் அமுதம்; அழிவெனக் கில்லை;
சுதந்திரன்; இருவினைத் தொடர்பெனக் கில்லை.
ஆசை மோகம் அச்ச மெனக்கிலை.
பாச பந்தப் படரெனக் கில்லை.
வென்றால் மகிழேன்; வீழ்ந்தால் தளரேன்.
என்று மிருந்தவா றின்று மிருக்கிறேன்.
சாதி சமயச் சழக்கெனக் கில்லை.
போதினி லிதழ்கள் பொருந்திய தொப்ப

உலகுயி ரெல்லாம் ஒருவனு மிறைவன்
பொலியரு ளுடலிற் பொருந்திய தொகுப்பே.
அவன்மனப் படியே யாடுதிவ் வாழ்க்கை;
அவனிச் சைக்கிலை தாருக வேள்வி,
என்று திடமா யிருந்திடு வானைக்
கொன்றுயி ருண்ணுங் கூற்றும் நடுங்கும்.
கூற்றை யுதைத்த கொற்றச் சேவடி
போற்றியுன் னுளத்தே யாற்றுது நடனம்.
அதனைப் பற்றி யாங்கே யமர்வாய்.
அதுவே யுன்றன் அமைதி நிலையம்.
துள்ளித் துள்ளித் துடிக்கு மனத்தை
மெள்ளப் பிடித்துன் னுள்ளத் தடைப்பாய்.
பெண்ணிலும் பொருளிலும் பேய்போ லலையும்
கண்ணைச் சிமிட்டிக் கறங்கெனத் திரியும்
வம்புகள் விலைக்கு வாரி வாரிவீண்
கும்பலாய்க் குவிக்குங் கொடுமனக் குரங்கு,
எந்தை யடியி லிணைத்திம் மனத்தைச்
சிந்தனை யற்றுச் செய்வன செய்வாய்.
அமர்ந்த சித்தமும், அடங்கிய வுள்ளமும்,
தமரஜ சத்துவத் தளையறு சமமும்,
ஆறுகள் பாய்ந்தும் அலைசட லிருக்கும்
ஆறுபோ லகண்ட வமைதிப் பெருக்கும்,
குறைவறு நிறைவெங் குன்றென வுறுதியும்
சிறையறு வாழ்வுந் திருவருட் கலப்பும்
நீரிற் படகெனப் பாரினி லிருந்தும்,
பார்தனக் குள்ளே பற்றுத் துறவும்,
காற்றுங் கடலுங் கதிருங் கனலும்
வேற்றுமை யின்றி வேலைசெய் வதுபோல்,

இருவிகற் பின்றி யியன்றது புரிந்து,
வருபயன் கருதா வளர்பணி வேள்வி.
உலகின் இசைவசைக் குட்படா கருந்தேன்
மலரில் வண்டென வாழுத லறமே.
அறிஞரை யெளிதில் அறியா துலகம்.
அறிஞரும் உலகின் அறிமுகம் வேண்டார்.
உன்னுள் அடங்கி யுன்னை நீ திருத்தாய்.
தன்னை யறிந்தாற் பின்னிட ரில்லை.
தானே தனக்குத் தளையும் பகையும்
தானே தனக்குத் தருநல மெல்லாம்.
உனக்கு நீதா னுண்மையா யிருந்தால்,
மனக்கி லேசம் மாய்வழி யதுவே.

## வாழ்வுநெறி.

அருந்தல் பொருந்தல் அனந்தல் அளவுடன்
திருந்த மேற்கொள்; மருந்தது வாகும்.
பசித்தீக் கினிய பாத்துண் விருப்பு.
நசைவாய்ப் பட்ட நச்சுத் தீனி
நோய்தரும்; மேனி நுடங்கா திருக்கத்
தூய நினைப்பும், தொண்டொடு தொண்டர்
நேயமும், நல்ல நிறைமுறை வாழ்வும்,
ஏயதோர் பயிற்சியும் இசைந்தவா றியற்றாய்.
கன்மயக் காலே கருத்து மயங்கிப்
பெண்ணாண் பேதம் பிறந்தது காணாய்.
ஆணைச் சிவமாய், அரிவையைச் சிவையாய்,
பாலுறக் கருதாய்; மாசறு மெண்ணம்,

இணைபிரி யாமல் இறைவ னருளாம்
உணர்வொடு வாழலே யோகம தாகும்.
உள்ளுணர் வாலே யோகக் கனல்வளர்.
வெள்ளமா யின்பம் விரிந்துனைச் சூழும்.
தனித்திரு; விழித்திரு; தான்றன தற்றிரு;
மனத்தின் மாய மயக்குக ளொழியும்.
அற்றம் பாரா தகத்தினைப் பாரு.
சுற்றம் பாராச் சுழிமுனைப் பாரு.
புருவ நடுவே பொருந்தப் பாரு.
இருத யத்தில் இருந்துனைப் பாரு;
பொறிவாய்ப் படாதுன் னறிவாயிருந்திடு;
நிறைபெறுந் தூய நித்தியா னந்தம்;
காலதேசக் கட்டுகள் பற்று.
ஆலய முலகாம்! ஆடலே வாழ்வாம்'
இறைவனுக் கிந்த நிறையன் புயிரை
இறைவ னருளே யின்புற நடத்தும்.
† ஈந்துளக் காதலால் ஈரறக் கலந்து,
வாய்ந்தரு ளின்பம் வாழிய வெல்லாம்.



† தன்னைக் கடவுளுக்கு நிவேதித்து:

# இன்பமாலை.



## 2

### அனுபவம்.

ஏட்டுச் சோறு வாட்டந் தணிக்குமோ?
வாட்டந் தணிப்பது வாரியுண் ணமுதம்.
படத்தி லெழுதிய பலாக்கனி யினிக்குமோ?
நடத்தை யின்றிப் படித்தது பயனா?
காசி யென்றாற் கங்கை பொங்குமோ?
பேசிப் பேசிப் பெரும்பசி தீருமோ?
உரையை விழுங்கி, யுலம்பறு மனத்தில்;
கரையறு மோனக் கடலிலம் மனத்தை
ஆழ்த்திடி னாங்கே யகப்படு முத்து,
காழ்த்திடு மாசை வீழ்த்திடு முன்னை.
ஓடாப் புலனுந், தேடா மகிழ்வும்,
ஆடா விளக்குபோல் அமர்ந்தெரி யறிவும்;
கோடா வுறுதியும், வீடா வுறவும்,
நாடா யுன்னுட் கூடா யுன்னை!

### பலவாம் உலகு.

சுற்றிலுங் காணாய் சுற்றுல கத்தைச்
சற்றுநீ தனியே சார்ந்து நினைப்பாய்:—

## ௨. உறக்கமேன்?

ஞான நூல்களும், நீதிநூல்களும், உபதேசங்களும், உபதேசியார்களும் எண்ணமுடியா. எல்லாம் கும்பகர்ணனுக்கு அலாரம் வைத்த கதையாயின. மனித சமுதாயம் இன்னும், இருளில் உறங்குகிறது. சமயம், கிளைச்சமயம், குட்டிச்சமயம் ஒவ்வொன்றிற்கும், சாமி, மடம், கோயில், கொள்கை, குறி, செயல், பரிபாஷை, சாத்திரம் வெவ்வேறு. ஒவ்வொன்றிற்கும் மோட்சம் வேறு. இருக்கட்டும்; உலகம் பலவிதம். அதது அததன் இயல்வழி நடந்து அமைதியாகத் தனது இலட்சியத்தை யடைந்தாற் பரவாயில்லை. ஆகாயத்தில் எவ்வளவு நட்சத்திரக் கூட்டங்கள் உள்ளன! பேச்சு மூச்சின்றி அமைதியாகத் தமது கடமையைக் காத்துக் காலைக் கோயிலை நோக்கி யாத்திரை செய்யவில்லையா? மனிதன்மட்டும் கடவுள்பெயரால் இப்படியேன் வாயாலும், கையாலும், வாளாலும் சண்டைபோட்டுத் தற்கொலை புரிந்து கொள்ளுகிறான்?

## ௩. சண்டைவேண்டாம்.

கவுடள் ஒன்று; கட்சி பல: தர்மம் ஒன்று; தர்க்கம் பல. வாய்மை ஒன்று; வாக்குவாதம் பல. சைவம், வேதாந்தம், சாக்தம், சமணம்,

பௌத்தம், ஜரதுஷ்ட்ரம், யூதம், கிறிஸ்துவம், இஸ்லாம், எல்லாம் எதை நோக்குகின்றன? இன்பத்தை! அருட் புலவர் இன்பத்திற்கு அறவழி காட்டினர்; மனிதன் மதக்கோட்டைகட்டிச் சண்டைபோடுகிறான். ஏட்டுச் சண்டை, எழுத்துச் சண்டை, சாமிச் சண்டை, சமயச் சண்டை, பூச்சுச் சண்டை, குடுமிச் சண்டை, சோற்றுச் சண்டை, மடச் சண்டை, கோயிற் சண்டை, தீர்த்தச் சண்டை, மோட்சத்திற்குக் கூடச் சண்டை—பாராலயத்தில் ஏனிந்தச் சண்டைகள்? கடவுள் ஒருவன், உயிர்க்குயிர், அவனேகதி என்று எல்லாம் பேசுகின்றன. கடவுளை ஒப்பாத மதங்கள் 'ஆத்மா ஒன்று; அது இன்பமயம்; ஆசையான வமாயத்தை யொழித்தால் அதை யடைந்து சுகம்பெறலாம்; எல்லாருக்கும் அன்பாயிரு; ஒன்றையும் திட்டாதே; பகைக்காதே; வெட்டாதே, கொல்லாதே,' என்று பேசுகின்றன. நடப்பதென்ன? இத்தனை உபதேசங்களும் சந்தைக் கூச்சலுக்கு சரளிபோட்டவன் கதையாயினவே! ஏன் இன்னும் மனித சமுதாயம் இன்பத்தைக் காணவில்லை?

## ௪. துன்பமேன்?

ஒரு கதை:—

மக்களுரில் பல பல மதத்தினர்; 'எனது

கடவுளே, இன்பம் அருள்வாய்!" என்று நீண்ட காலம் அவரவர் கோயிலில் வேண்டினர். கடவுள் ஒரு மலைமீது தோன்றினார்; 'நானே, இன்பம்; எல்லாருக்கும் இன்பந் தருவேன்; ஒற்றுமையாக வாருங்கள்! அன்பாயிருங்கள்' என்றார். 'எல்லாருக்குமா? நானும் அந்த அஞ்ஞானியும் சரியா? பூணல் போட்ட நானும் தொப்பி போட்ட அவனும் சரியா? பன்னிரண்டு திருமண்சாத்திய நானும், அந்த மரக்கால் பட்டையும் சரியா? கடவுளே உமக்குத் தாரதம்யம் தெரியவேண்டாமா? நான் வெளுப்பு, அவன் கறுப்பு, இவன் பழுப்பு, அதோ அவன் மஞ்சள்; எப்படி ஒன்றாக முடியும்?' என்றனர் சாதிப்பித்தரும் வர்ணமித்திரரும். 'அன்பிருக்குமிடம் யானிருப்பேன். ஒத்தால் இன்பம்; பகைத்தால் துன்பம். சாதிமதச் செருக்குள்ள மட்டும் இன்பம் வாராது!" என்று மறைந்தார் கடவுள்!

பாருங்கள், வானம்பொழிகிறது. நிலம் விளைகிறது. உழைப்பிருந்தால் பிழைப்புண்டு; செழிப்புண்டு. எனினும் பஞ்சம், வறுமை, போட்டி, பொறாமை, சோற்றுச் சண்டைகள் மனித ஜாதியைக் கொல்லுவானேன்? பாம்புக் கலியாணத்திற்குத் தேரை இலைபோட்ட கதையாகிறது, மனிதரின் வாணிபச் சூட்சி. பாகம் உனக்கு, பத்திரம் எனக்கு; மரம் உனக்கு,

பழம் எனக்கு; நிலம் உனக்கு நெல் எனக்கு; பாடு உனக்கு, பண்டம் எனக்கு. என்ற மாதிரி மனிதவுரிமையைப் பேராசை பிடுங்கித் தின்கிறது. உதட்டிலே ஐயர்வாள்; வயிற்றிலே அரிவாளாயிருக்கிறது மனிதர் உறவு. சபையிலே சமாதானம், நகரிலே குண்டு, பீரங்கி.

ஒரு சமயம் பல நாட்டார்கள் கூடி சமாதான தேவதையை வேண்டினர். தேவதை அசரீரியாகப் பேசினாள்:- 'நல்லது, சமாதானந் தருவேன்; ஆனால் அவரவர் அவரவர் நிலத்தைக் காத்துப் பிறர் பொருளுக்குப் பேராசைப்படாதிருப்பீர்களா? உங்கள் பீரங்கிகளைக் கடலில் எறிவீர்களா? உள்ளதைக்கொண்டு உழைத்துப் பிழைப்பீர்களா? ஒருவரை யொருவர் பகற்கொள்ளை யடிக்காதிருப்பீர்களா?' என்று கேட்டது. 'நல்ல சாமியடா நீ! என் பீரங்கியிற் கையை வைக்காதே. சுட்டுப் போடுவேன். பெண்போரும் மண்ணும் பொன்னும் கொடுத்தால் நல்லசாமி. உலகை வெல்ல உள்ளந் துடிக்கிறது. ஆயுதங்களைக் கடலிற்போடச் சொல்லுகிறாயா? எனது நிறமென்ன, மூளையென்ன, நாகரீகமென்ன? அந்தக் காட்டுமிராண்டியுடன், இந்த அஞ்ஞானியுடன், அதோ என்னுடன் போட்டி போட்டுக் கப்பல் வியாபாரம் நடத்தும் அவனுடன் எப்படி அன்பாக வாழுவேன்? தேவதையே எல்லா

நாடும் எனது நாடு; எல்லாரும் எனது அடிமைகள்; ஆனல் சமாதானப் பேச்செடு; இல்லாவிட்டால் கிட்ட வராதே!"என்ருன் ஆகாசகுண்டன். 'அன்பும், அகமகிழ்வும், நீதியுமில்லாத இடத்தில் அமைதி வாராது. இரத்தங் கலந்தால் இரக்கம்; இரத்தம் கொதித்தால் யுத்தம், துக்கம்! ஒன்றுபட்டால் உபகாரம்; வேறுபட்டால் விவகாரம். பாம்புச் சவுக்கால் சிங்கத்தை யடக்கிச் சவாரி செய்தாலும் ஆசையானவத் திமிர் பிடித்தவன், அமைதியாக அரசாள முடியாது,' என்று சமாதான தேவதை சென்ருள்!

சாமிப் பஞ்சமில்லை; சமயப் பஞ்சமில்லை. நிலப் பஞ்சமில்லை. நீர்ப்பஞ்சமில்லை. மடமையும் வறுமையும் உலகை ஏன் வாட்டுகின்றன? ஒன்றில் கூடிவாழத் தெரியாததால், உள்ளொற்றுமை யில்லாததால், தன்னலப் பேயின் தாண்டவத்தால், ஆசையானவத் திமிரினல்—மனிதன் அல்லற்படுகிருன்.

## ௬. தருமதேவி.

கடவுளே உன்னைத் தொழுகிறேன், அழுகிறேன்; தூபம் போடுகிறேன், தானம் செய்கிறேன்; எனது பக்கத்திலிரு; என் குண்டுக்கு

வெற்றியளி என்கிருன் மண்வெறியன். முகத்திலறைந்து முத்தங்கொடுப்பது போலிருக்கிறது இத்தொழுகை. தலையைவெட்டி மயிர் தானம் செய்வதுபோலிருக்கிறது இந்த ஈகை. வழிபட்டாலும் வாள்வெறி சுகிக்குமா! தேனில் ஊறினாலும் எட்டி இனிக்குமா? 'மன்னர்களே, மனிதரை மனிதராக மதித்து ஆளுங்கள்; அறக் காவலர்களாயிருங்கள்; அரசும் செல்வமும் காலநதிக்கரையிலுள்ள களிமண் மண்டபம் என்று நினையுங்கள்! உள்ள மட்டும் உண்மையாயிருங்கள்! உலகில் அன்பைவளருங்கள்!", என்கிருள் தருமதேவி! யார் கேட்பது?

## கூ. சந்தேகம்.

'என் கோழியாலேதான் பொழுது விடிகிறது,' என்று தனிமனிதன் அகந்தையிருள் தம்பட்டமடிக்கிறது. முள்ளில்லாத ரோஜா இல்லை; சள்ளை யில்லாத சமயமில்லை. ஒவ்வொன்றும் தனக்கே மோட்சம்; மற்றவர்களுக்கு நரகம் என்கிறது. சாதி மதங்கள் பெருக்கிய இரத்த வெள்ளத்தைக் காண்பவருக்குப் பல சந்தேகங்கள் உண்டாகின்றன. கடவுள் உண்டா? இருந்தால் ஏன் அவர் பெயரால் இத்தனை சமயச் சண்டைகள், போர்

கள்? சாமி மதத்தை உண்டாக்கினரா? இல்லை. மதம்,சாமியின் பெயர் வடிவின்மேல் மனிதன் பூசிய முலாம். சாமி ஒன்று, பலவா? பலவானல் எந்தச்சாமி பெரிது? ஒன்றானல் பல சாதி சமயமேன்? ஏன் எல்லாரும் ஒரேசாமியுடன் கலந்து வாழக்கூடாது? மதம் அவசியமா? எல்லாருக்கும் பொதுவான தருமம் உண்டா? மனிதன் எப்படியிருந்தால் ஒரு குலமாக வாழலாம்? எதனல் சண்டை சச்சரவுகள் ஒழிந்து அன்புபெருகும்? கோயில், குளம், தீர்த்தம், கதை, புராணம், வேதம், ஆகமம், சடங்குகளுக்குப் பஞ்சமில்லையே! ஏன் மனிதன் இவ்வுலகில் இன்பமாக வாழ முடிய வில்லை? என்ற கேள்விகள் இயல்பாக உதிக்கின்றன.

## எ. அகண்ட சக்தி

ஆணவச் செருக்கு 'பார் என் மூளைத் திறத்தை; ஐந்து மைல் மேலே ஏறிப் பேசுகிறேன்' என்கிறது! 'அப்பனே உனக்கு மேல் பரந்துவிரிந்த ஆகாயம் உள்ளதைக் காணையா? உனக்குமேல் பருந்தும் பறக்கும்' என்கிறது அடக்கம். 'பார் நான் பூமியைக்கட்டியாளுகிறேன், எனக்குமேல் யார்உண்டு?' என்கிறது ஆணவம். 'ஐயாவே ஆகாயத்தில் பார்;

எண்ணமுடியாத விண்மீன்கள் உள்ளன. ஒவ்வொன்றும் சூரியன். அதைச்சுற்றி எத்தனேயோ உலகங்கள் உருளும். அப்படிப்பட்ட உலகக் கூட்டத்தில் இவ்வுலகம் ஒரு அணுவுக்குச் சமானம். அந்த அணுவில் ஒரு துனி உனது அரசு. ஏன் பெருமை பேசுகிறுய்? அண்டாண்ட கோடிகளேயும் நடத்தும் ஒரு சக்தியுள்ளது. அதன் முன் உனது அதிகாரம் எந்தமட்டு?' என்கிறது அடக்கம். 'என் புகழ் பரவுகிறது பார்' என்கிறது ஆணவம். 'அப்பனே உன்னேவிட சூரியன் கதிர் எங்கும் பரவி, உலகையே தாங்குகிறது பார்? ஆனுல் அது உன்னேப்போல் அகந்தை பேசவில்லே', என்கிறது அடக்கம். இயற்கையின் அற்புதங்களேயும், கடல், மலே, விண், மதி, கதிர், மலர் பறவைகளின் தோற்றங்களேயும் உற்றறிந்தால், இவற்றையெல்லாம் இயக்கும் ஒரு சக்தி உண்டெனக் காணலாம். அந்த சக்தியின் அற்புதங்களே நினேத்தால் மனிதனின் ஆணவம் தலே குனியும். கரியும் இரும்பும் சேர்த்து மினுக்கு வைரம் செய்கின்றனர். அது இயற்கை தரும் வைரத்திற்குச் சமானமாகுமா? கோடி மின்சார விளக்கெரிந்தாலும் சூரியனுக்கு ஈடாகுமா? நீர்க்காற்று இரண்டு பங்கு உயிர்க்காற்று ஒரு பங்கு ($H_2O$) எவ்வளவு சேர்ந்தாலும் வான் மழைக்கு ஈடுகட்ட முடியுமா? விமானமேறி விண்ணேத்தாவ முடியுமா? படிகொண்டு கடலளக்கமுடியுமா? நமது மனத்திற்கு எட்

டாத ஒரு சக்தி உலகை நடத்துகிறது. இதை அனைவரும் ஒப்பியேதீர வேண்டும்.

## அ. ஆன்மா.

அந்த சக்தி உண்டு; யோகிகள் உணர்கிறார்கள். அந்த சக்தியையும் இயக்கும் ஒரு சுத்த சக்தி உண்டு. அதையே சாமி, கடவுள், அல்லா, பிரம்மம் என்கின்றனர். வானத்தில் சூரியன் உதிக்கிறான். அவன் கதிர்கள் ஒளி வீசுகின்றன. கடல் ஆவியாகிறது; மேகங்கள் உண்டாகி மழை பொழிகிறது. பயிர் விளைகிறது, உயிர் செழிக்கிறது. பல தொழில்கள் நடக்கின்றன. அத்தனைக்கும் காரணம் கதிரொளி. அத்தனைக்குள்ளும் கலந்தது கதிரொளி. அப்படிக் கலந்தும் தான் தனியே ஆகாயத்தில் இருந்தபடியே இருக்கிறது. அது போலவே சுத்த சக்தி அகண்ட சேதனமாக, அறிவாக எங்கும் பரவியுள்ளது. ஒவ்வொருவரும் அதன் கோயில்களே. ஒவ்வொருவர் உள்ளத்தும் அதுவே ஆன்மாவாக உள்ளது: வாழ்வின் அடிப்படை அதுவே. நீர் கடவுளை ஒப்பினாலும் சரி, ஒப்பாவிட்டாலும் சரி: மதங்களை மதித்தாலும் சரி, விடுத்தாலும் சரி; உம்மிடம் குடிகொண்டிருக்கும் உயிருக்குயிரான ஆன்மாவைப் பிரியமுடியாது. நீர் அதை அறிந்தாலும் சரி, அறியாவிட்டாலும் சரி; அது உமது உள்ளத்தில் உள்ளது. உமது வீட்டுக்குள் ஒரு புதையலுள்ளது; உமக்கே தெரியவில்லை!

இடம் பார்த்துத்தோண்டினல் அகப்படும். உமது உள்ளத்தில் ஒரு பரம சுகப்பொருள் உள்ளது. உள்ளே ஆழ்ந்து தியானித்தால் அது உணர்வாகும். இதைப் பரம நாத்திகனும் மனங்குவிந்து காணலாம். இப்பொருளை உள்ளே கண்டால் ஒவ்வொருவருள்ளும் அந்தப் பொருளே, ஒவ்வொருவரும் அந்த ஆத்மாலயமே என்று உணரலாம். அப்போது எல்லாரிடமும் பேரன்பு பிறக்கும். ஒற்றுமை உண்டாகும். எல்லாவுடலும் இறைவனுலயமே என்னும் விசுவ சேதனம் (Cosmic consciousness) உண்டாகும். 'ஒவ்வோருள்ளத்திலும் நான் ஆத்மாவாக உள்ளேன்' என்கிறான் இறைவன்.

## கூ. உபநிஷத்துண்மை.

அந்த ஆத்மாவை அறிந்துதான் நமது பாரத மகரிஷிகள் உபநிடதம் பாடியிருக்கின்றனர். மற்றப் புராணங்களைப்பற்றி நமக்குச் சந்தேகமிருக்கலாம். முற்றிலும் சுயாலமின்றி, பெயர் புகழைக் கூடக் கருதாத மஹாத்மாக்களான மஹரிஷிகள் அருளிய உபநிஷத்தில் நமக்குச் சந்தேகமில்லை அவை முற்றிலும் உண்மை. கடவுள் ஒருவன்; எங்கும் உள்ளவன்; ஒவ்வொருவருள்ளும் அவனே ஆன்மா! ஒவ்வொன்றின் உயிரும், உண்மையும் அவனே! உடல்கொண்டு உலாவுவோன் அவனே! ஆகலான் அனைத்துயிர்களும், எவ்வித வேறுபாடுமின்றி, அவனில் ஒன்று. அவனே வேதம் 'அது'

என்னும்; அன்பன் அவன் என்பான். சாக்தன் சக்தி என்பான். சைவம் மூன்றையும் சம்மதிக்கும். அந்த ஒன்றே பலவானது; அதையறியாதவர்கள் சண்டைபோடுகின்றனர். அந்த ஆத்மாவைப் பிரித்து உலகை நோக்கினால் பகையும் சண்டையும் கவலையும் மடமையும் வலுக்கும். அன்னியம் என்னினால் அச்சமும் துயரும். அவன் புருஷன்; ஜீவாத்மா. எனக்குள்ளே யுள்ள அந்த ஆத்மாவே சூரியனிலும் உள்ளான் உண்மையறிவாளிக்கு எல்லாம் ஒருமயம்; தானான ஆன்மாவே அனைத்தும். இந்த ஆன்ம ஒருமையை எங்கும், எல்லாரிடமும் காணும் அறிவாளிக்கு அச்சமேது, மோகமேது? அந்த ஆத்மாவை அறிந்தால் அனைத்தையும் அறிந்ததாகும் ஏனெனில் அதுவே அறிவு; அதுவே அறிவின் எல்லை. உலகம் ஆத்மமயம். அந்த ஆத்மா நீ; (தத்வமசி) என்று உபநிடதம் முறையிடுகிறது.

எங்கும் தானாய், எனக்குள் இன்பமாய், அனைவருள்ளும் அதுவாய், நின்று விளங்கும் பரமசுகப் பொருளான இந்த ஆன்மாவைக் காணவேண்டும். என் வீட்டில் நவநிதிச் சுரங்கத்தை வைத்துக் கொண்டு பிச்சையெடுக்கலாமா?

## ம. தத்வமஸி.

கடவுளரசு உமக்குள் உள்ளது (The Kingdom of God is within you), நீங்கள் கடவுளர் (Ye

are Gods) என்கிறார் ஏசுநாதர். தத்வமசி (அது நீ, சாமி நீ) என்கிறது பாரத தர்மம். நீர் இந்துவானாலும் சரி, வேறெந்த மதத்தினராயினும் சரி, மதமற்றவராயினும் சரி, கேளும். சாதி மதம் சாத்திர கோத்திரங்களைப் பற்றிக் கவலையில்லை. பகுத்தறிவோடு வரலாம். வேதரிஷிகள் சங்கரர், இராமானுஜர், வியாசர், ஏசுநாதர், சுகர், ஆழ்வார், நாயன்மார்கள், வள்ளலார், பரமஹம்ஸர், விவேகானந்தர், ராமதீர்த்தர், ரமண ரிஷி, அரவிந்தர் போன்ற ஆத்ம ஞானிகளின் அநுபவ மொழிகள் பொய்யல்ல. வேட்ஸ் வொர்த், பிரௌனிங், கார்லைல், எமெர்ஸன், விட்மென், பெர்கிலி, ஹெஜெல் தாந்தே தோஸன், மாக்ஸ்முல்லர் போன்ற வெண்ணறிஞர் ஆத்மஞானிகள். இந்த தெய்வீக ஆன்மா மனைவி, மக்கள், செல்வம் எதனினும் அருமையானது. அனைத்தினும் அது நமக்கு நெருங்கியுள்ளது. அது நாமே; நாமே அது. 'ஒவ்வொருவரும் இந்த ஆத்மாவையே அருமையாக வழிபடவேண்டும். உயிர் அதன் உடல்; ஒளி அதன் வடிவு; உண்மை அதன் குறிப்பு; அது எங்குமுள்ளது: என் உள்ளத்தில் உள்ளது—அது ஆன்மா, அது இதயக்கமல்' என்று உபநிடதப் முறையிடுகிறது. இந்த ஆன்மாவை அப்பர் உள்ளமே என்றார்.

## ௧௪. ஒருமைப்பாடு.

மனங்கள் பல, மதங்கள் பல, மனிதர் பல; அனைவருள்ளும் ஆன்மா ஒன்று. நதிகள் பல;

கடல் ஒன்று. படித்துறைகள் பல; குளம் ஒன்று. மரங்கள் பல; தோட்டம் ஒன்று. கிளைகள் பல, மரம் ஒன்று; நட்சத்திரங்கள் பல, ஆகாயம் ஒன்று. இவ்வாறு சுற்றிலுமுள்ள இயற்பொருள்களை நோக்கினால், பலவாகக் காண்பது ஒன்றில் ஆதாரப் பட்டிருக்கும். கதிர்கள் பல; கதிரவன் ஒன்று. அதுபோல உடல்கள் பல, உள்ளான்மா ஒன்று. அதுவே வீரரில் வீரம், அறிஞரில் அறிவு, காதலரில் காதல், சித்தரில் சித்தி; அதுவே வாழ்வின் ஊற்று; எல்லாருள்ளும் அதுவே இருந்து இயங்குவதால், அதுவே ஒற்றுமைக்கு அடிப்படை. மனங்குவிந்து, உள்ளத்தில் ஊன்றி தியானித்து, யோகிகள் ஆன்மாவை அடைகின்றனர். எல்லாரும் அதை அடையவேண்டும். மூச்சு இயல்பாயிருப்பது போல ஆன்மவுணர்வும் இயல்பாக வேண்டும். உள்ளே கண்டால் உலகில் அதுவே. அப்போது சாதிமத வேறுபாடின்றி ஆன்மகோடிகளை ஒருகுலமாகக் காணலாம். உள்ளும்புறமும் அதையடைந்து, உலகமே ஆன்மாலயமாகவும் மாந்தரெல்லாம் அத்யாத்ம சித்தராகவும் வாழும் வழியை, இன்பமாலை விளக்குகிறது.

## ௰௨. சுத்தான்ம சித்தி.

ஆன்மா சுத்தம். எல்லா மதங்களும் சுத்த நிலையையே முடிவாகக் கொண்டன. ஆன்

மாவை அடைதற்கு சுத்தமே வழி. மனம் மாசற்ற கண்ணாடிபோலானால் அதில் ஆன்மா நிலவும். ஆத்மசித்திக்குப் பல ஸாதனங்கள் உண்டு. சிலர் கடுந்தவ விரதங்களால் அடைவர். சிலர் காணும் உலகை 'அல்ல' என்று ஒதுக்கி 'நானார்' என விசாரித்து 'நான் ஆன்மா' என்ற முடிவிற்கு வருவர். சிலர் பேரன்பால் கடவுட் கலப் பெய்துவர். எல்லாப் பாதைகளுக்கும், மதங்களுக்கும் அடிப்படையான கொள்கைகள் சில உண்டு. அவை மனோவாக்குக் காய சுத்திக்காக ஏற்பட்டன. அன்பு, உறுதி, மெய்யறிவு, உட்களிப்பு, தைரியம், கற்பு, ஸமநோக்கு,—இவை மனத்தைச் சுத்தமாக்கும், ஆசைவெறி—வஞ்சம்—பொறாமையற்ற மெய்யுரை, வீண்பேச்சின்மை, மௌனம்—இவை வாக்கு சுத்தம் தரும். ஒரு யோக்கியமான உழைப்பால் பிழைத்தல், நேர்மை, அருட்பணி, உடலுறுதி, நல்லுணவு, தூயவுடை—முதலியன தேக சுத்தமாகும். இவ்வாறு முத்தூய்மை பெற்றவர் சுத்த மனமெய்துவர். வீச்சிலும் பூச்சிலும் வேற்றுமையிருக்கலாம். அன்பும் தூய்மையும் அனைத்திலும் ஒன்றே. சுத்த மனதால் ஆசையாணவ மாயத்தளைகளினின்று சுதந்திரம் பெறலாம். இந்தச் சுதந்திரத்தால் 'நான் ஆன்மா; எனக்கு, பந்தமில்லை; ஆன்மா என்னுள் உள்ள கடவுள்' என்னும் அறிவு பிறக்கும், இவ்வறிவால் ஆத்ம ஸமத்வம் உண்டாகும். அதனால் 'நான் ஆத்மா; உலகில் உலாவும்

உயிர்களும் ஆன்மத் தொகுதியே; நான் நட மாடுங்கோயில்; என்னைச் சுற்றியுலாவும் உயிர் களும் நடமாடுங்கோயில்கள்' என்ற அஹ மாத்ம, சர்வாத்ம ஞானம் சித்திக்கும். இது தான் சுத்தான்ம ஒருப்பாடு. இதில் நிலைத்து ஜீவன் முக்தனாக, சுத்த முக்த ஸமத்வ சித் தனாக வாழுவதே சுத்தான்மசித்தி. அந்நிலை யில் வெளித்தோல் விகாரங்களால் மனம் மாறு படாது; சாதி, நிறம், மதம், நாடு, முதலிய வேறுபாடுகளின்றி யாதும் கோயில், யாவரும் ஆன்மா என்ற உயர்ந்த சுத்த ஸமதர்சனமுண் டாகும். பிறகு சாதிமத விகாரங்களுக்கே இட மிராது.

இந்த ஆன்ம விளக்கத்துடன் நம்முள் ஒரு சக்தி உணர்வாகும். அதுவே சுத்த சக்தி அல் லது ஆத்ம சக்தி. அதற்கு அளவற்ற ஆற்ற லுண்டு. நெபோலியன் பீரங்கிமதம் வாதர்லூ வில் (Waterloo) வீழ்ச்சி பெற்று ஹெலனு வில் சிறைப்பட்டிறந்தது. ஏசுநாதரின் ஆத்ம சக்தி சிலுவையேறியும் சிரஞ்சீவியாக வாழுகி றது. சிவாஜியின் கூரிய வாளைவிட புத்தரின் சாந்தப் புன்னகைக்கு சக்தி அதிகம். கலிங்கப் போர்வீரனான குலோத்துங்கன் ஈட்டியை விட, வள்ளலாரின் அருட்பாவிற்கு சக்தி அதி கம். மூளைவலிவால் முரட்டு விலங்குகளை மனி தன் அடக்குகிறான். மூளையைவிட புத்திபலம் அதிகம்; அதைவிட ஆத்மபலம் ஆயிரம்

மடங்கு அதிகம். இந்த சுத்தான்மக் காட்சியும், சுத்தான்ம சுதந்திரமும், சுத்தான்ம ஸமத்வமும் சுத்தான்ம சக்தியும், நேயமும், சிலயோகிகளுக்கு மட்டுமல்ல; ஆண் பெண் அடங்கலுக்கும் எய்தவேண்டும். 'உலகில் ஒரு ஆண் ஒரு பெண் இந்த சுத்தான்ம சக்தியின்பத்தை இன்னும் பெருவிடின் எனக்கு முக்தியில்லை, இன்பமில்லை. நான் ஆத்ம பரிபூரணம் பெறுவது முதல்வேலை; என்னைச் சுற்றியுமுள்ளவர்களுக்கு அந்தப் பரிபூரணத்தை அளிப்பது இரண்டாவது கடமை,' என்று ஒவ்வொருளுமும் உணர்க. சுத்தான்ம தர்மஸாதனம் அனைவருக்கும் பொது. அனைவருக்கும் உரிமை. சாதிமத விகாரங்கள் அதன் கிட்ட வரக்கூடா.

## ௰௫. ஸாதனம்.

சொல்ல வேண்டியதைச் சொல்லியாயிற்று; செய்யவேண்டியதென்ன? சாதிமத வேறுபாடுகளை மனத்தினின்றும் ஒழி. 'சாதி, மதம், நிறம், நாடு என்ற வேறுபாடு எனக்கில்லை; நான் சுத்தான்மா' என்று எப்போதும் கருது. இவ்வுடல் அந்த சுத்தான்மாவின் மாளிகை, கோயில், எனக்கருது. தூசி அழுக்கு தீயசிந்தனையின்றிக் கோயில் புகுவதுபோல இந்த ஆத்மாலயத்தில் மனமாயம், மடமையிருள், சினவெறி, மோகப்பேய், சுயநலம் புகாமல் கவனமாயிரு. உள்ளே ஆத்மராஜன்

உள்ளான். எந்த நினைப்பு உள்ளே புகுந்தாலும், 'நீ யார்? நண்பனா, பகைவனா?' என்று கேள்; தீய எண்ணமானால் திருப்பி விரட்டு. நல்லதானால் உள்ளே வரட்டும். கண்ணுக்கு இமைகாவல்; தனக்கு அறிவே காவல். அதிகாலை எழுந்து தேகசுத்தி செய்துகொண்டு, குளித்துத் துவைத்து உடுத்தி, பரிசுத்தமாக, எக்கவலையுமின்றி, ஒரு தூயதனியறையில் அல்லது இயற்கையழகின் முன் பத்மாஸனத்தில் உட்காரு. தலை, கழுத்து, மார்பு, நேராயிருக்கட்டும். உலகம் முழுதையும் ஒரு கோயிலாக பாவித்துக்கொள். சூரியன் அக்கோயில் விளக்கென்று நினை. உன் உள்ளம் அக்கோயிற் சந்நிதி யென்று கருது. அந்த சந்நிதியில் ஒளிவடிவாக ஒரு சக்தி கனலுவதாக தியானி. அது மன விகாரம், இன விசாரம் அற்ற பரிசுத்தமான பொருள். அதுவே நான்; அதுவே எனது இஷ்டதேவதை; அது சுத்தம்; அதன் வடிவு சக்திக்கனல் என்று தியானி. பந்த தொந்தங்கள் எனக்கில்லை; நான் இந்த சுத்தன், சுதந்திரன், ஆத்மஸமத்வன் என்று சிந்தி. மனத்தை வெளியே சிதறவிடாதே. எண்ணங்கள் அலைவீசும்; உறுதியைச் சந்திக்கிழுக்கும். பேய்க்குரங்கு போல மனம் தள்ளும்; அசையாதே. இதெல்லாம் உனக்குப் புறம்பே நடப்பது; உனக்குச்சம்பந்தமில்லை என்று உறுதியாயிரு; உள்ளத்தையே பார். அதைரியப்படாதே.

நாளடைவில் மனம் நிலைக்கும்; புயல் அடங்கும். ஒரு அமைதி பிறக்கும். அறிவு கனலும். வருஷக் கணக்காக யோகிகள் தவஞ்செய்து இந்த சுத்தான்மசித்தி பெறுகின்றனர். இன்னும் எனக்கு வரவில்லையே என்று அதைரியப் படாதே. தினம் இவ்வாறு காலை அரைமணி நேரம், அந்தியில் அதேமாதிரி பரிசுத்தமாக அரைமணிநேரம் தியானி. அப்போது வேறு வேலை, சிந்தை வேண்டாம். தூய அன்பர் பலர் கூடி இவ்வாறு தியானிக்கலாம். இல்லறத்தார் தங்கள் மனைவி மக்களுடன் தியானித்தல் நல்லது. மனைவி கணவனை சிவாம்ஸமாகக் காணுக: கணவன் மனைவியை சக்தியாகக் காணுக. குழந்தைகளை முருகன், கண்ணன், வள்ளி, திருமகளாகக் காண்க. நாளடைவில் மன விகாரங்களும் விகற்பங்களும் ஒழிந்து, தூய சிந்தனையும், ஆன்மவுறவும் ஆன்மக்கலப்பும் உண்டாகும். இதைப்பற்றிய சாதனங்களெல்லாம் **யோகசித்தியிற்** காண்க.

## ௧௪. தியான மந்திரம்.

மதோபதேசங்களைவிட இந்த தியானம் ஆயிரம் மடங்கு மேல். இந்த ஒரு மணிநேரம் உளங் குவிந்திருந்து மீதி நேரத்தில் உனக்குரிய தொழிலை கவனிக்கலாம். நாளடைவில் எத் தொழிலைச் செய்தாலும், எங்கிருந்தாலும்

உனது சித்தம் ஆன்மாவிலேயே நிலைக்கொண்டு அதையே பற்றி நிற்கும். பிறகு உலகின் முக்குணப் போராட்டங்கள் உன்னைப் பற்ரு, உன்னுள்ளமே திருவாசகமாகும்; வேறு உபதேசங்களுக்குத் தேவையிராது. இவ்வாறு ஒவ்வொரு ஊரிலும் அன்பர் கூடி ஒரு மணி நேரம் சுத்தான்ம தியானம் செய்யவேண்டும். ஒரு பெரிய தோட்டத்தில் தியான மந்திரம் அமைக்கவேண்டும். சாதி மதவேறுபாடின்றி யாரும் அங்குவந்து குளித்து, உடுத்தி, கூடி தியானம் செய்யலாம். தியான மந்திரத்தில் பளிச்சென்று வெளிச்சம், புதிய மலர்கள் இவைதான் இருக்கலாம். வேறு படம், உருவம் வேண்டாம். அவரவர் உள்ளத்தையே கோயிலாகவும், அதிலுள்ள சுத்தான்ம சக்தியே கடவுளாயும் தியானிக்கவேண்டும். ஆன்மக் கோயிலின் விரிவே உலகாலயம் என ஒவ்வொருவரும் கருதவேண்டும். இந்த ஸாதனம் இயல்பானல் மற்றப் பேரின்பச் செல்வங்களெல்லாம் தம்மால் வந்தெய்தும். இந்த சுத்தான்ம பரிபூரணத்திற்கே இன்பமாலை வழிகாட்டுகிறது. அன்பர் ஒவ்வொருவரியையும் அமைதியாகச் சிந்தித்து ரிக பழுக்கப் பழுக்கப் பழுது நீங்கும்; உள்ளும் புறமும் ஒரேயினிப்பாம்!

ஓம் சுத்தசக்தி.

சுத்தானந்த பாரதி.

ஓம்
சுத்த சக்தி!

---

# இன்பமாலை.

## இன்பச் சுரங்கம்.

ஆன்மா யானென் றறிவா யின்பத்
தேனு ருகச் செழித்திடும் வாழ்வே!
அன்பிளம் பிஞ்சே, யார்வக் குஞ்சே!
இன்பப் பொன்விதை யிருக்குதுன் னுள்ளே.
இதயச் சுரங்கத் திலங்குது செல்வம்.
சிதைவற முயன்றுட் புதைபொருள் காணாய்.
பொருளைப் புதைத்தது பொய்ம்மன மெழுக்கு
அருளைத் தூண்டி யதனை யுருக்காய்.
அன்புறக் கடைந்தால் அருளனல் பிறக்கும்.
துன்பக் காட்டைத் தூருட னெரிக்கும்.
இதுவது வெனநீ யேங்கித் திரியேல்.
பொதுப்பொரு ளொன்றே பொருந்துக வுள்ளே.

## உபாசனை.

பாரெலாங் கோயில்; பலபெயர் வடிவாம்
ஆருயி ரெல்லாம் ஆண்டவன் மேனி.

உடலெலா மிறைவன் நடமிடுங் கோயில்.
கடமெலாஞ் சித்தா காச நிறைவு.
உள்ளதொன்றென்னும் உறுதிபூண்டிருப்பாய்.
ஒள்ளிய ஆன்ம வொருப்பா டுதிக்கும்.
சிவனோ சக்தியோ திருவளர் முருகனோ,
அவனவ ளதுவென் றறிஞர்கண் டடங்கிய,
பொருளெலா மொன்றே; அருளினால் விளங்கும்.
இருளெலா மனத்தின் இருவிகற் பாட்டம்.
உருவைப் பணியினுங் குருவைப் பணியினும்,
அருவையுள் ளுணர்கினும், ஆம்பயன் ஒன்றே.
கன்மன முருகிற் பொன்மன மாகும்.
பொன்மன மாயிற் பொன்னுட லாகும்.
புருவ மத்தியிற் பொலிபூஞ் சுடரை
முருக னென்றனர் முத்தமிழ்ப் புலவர்.
குண்டலிக் கனலே குமுறும் வடிவேல்.
மண்டிரு ளாணவ மாயமே யரக்கன்.
இதயக் குகைக்குள் இலங்குவான் குகனே.
உதயக் கதிர்போல் ஒளிருவ னாங்கே.

## அழிவறுமான்மா.

அழிவது நிலைப்பதி யாதென வாராய்;
அழிவை விலக்கித் தெளிவைப் பற்றிநில்.
இறப்பதும் பிறப்பதும் இவ்வுடல் வினையே.
இறப்பதும் பிறப்பதும் இருவினைத் தீர்வை.
இருவினை விலகிற் கருக்கணக் கொழியும்,
திருவினை முயன்றால் தீவினை தீரும்.
இவ்வுட லெதனால் இயங்குவ தாமோ,

அவ்வரும் பொருளே யான்மா வென்பர்.
யாக்கைச் சட்டை யணிந்தவ் வொன்றே
பார்க்கப் பலவாய்ப் பாரினி லுலவும்.
பெயர்வடி வத்தோல் பிரித்துளங் காணின்
துயர்வினை யற்ற சுகக்கனி யொன்றாம்.
உண்ணுக வதனை யுயிருள மினிக்கும்.
உன்னா வுண்ணப் பொன்னா முடலும்.
அழிவழி யாமை யறிவறி யாமை
பழிபழி யின்மை பயன்பய னின்மை
யாதென வுள்ளே யாராய்ந் தறிவாய்.
சோதனை செய்தே தூயன கொள்வாய்;
யாக்கைச் சட்டையுள் அழிவறு மான்மா
தாக்கற நிற்குஞ் சாட்சியென் றறிவாய்;
மாறுமிவ் வுலகம்; மாறுமிவ் வுடலம்;
மாறான் பேரான் மாயான் ஆன்மா;
வாளுந் தீயும் வலிவுறத் தாக்கினும்,
மாளா திந்த மன்னுயி ரான்மா.

## ஆன்ம சுதந்திரம்

அதுதான் அமுதம்; அழிவெனக் கில்லை;
சுதந்திரன்; இருவினைத் தொடர்பெனக் கில்லை.
ஆசை மோகம் அச்ச மெனக்கிலை.
பாச பந்தப் படரெனக் கில்லை.
வென்றால் மகிழேன்; வீழ்ந்தால் தளரேன்.
என்று மிருந்தவா றின்று மிருக்கிறேன்.
சாதி சமயச் சழக்கெனக் கில்லை.
போதினி லிதழ்கள் பொருந்திய தொப்ப

உலகுயி ரெல்லாம் ஒருவனு மிறைவன்
பொலியரு ளுடலிற் பொருந்திய தொகுப்பே.
அவன்மனப் படியே யாடுதிவ் வாழ்க்கை;
அவனிச் சைக்கிஃ தாகுக வேள்வி,
என்று திடமா யிருந்திடு வானைக்
கொன்றுயி ருண்ணுங் கூற்றும் நடுங்கும்.
கூற்றை யுதைத்த கொற்றச் சேவடி
போற்றியுன் னுளத்தே யாற்றுது நடனம்.
அதனைப் பற்றி யாங்கே யமர்வாய்.
அதுவே யுன்றன் அமைதி நிலையம்.
துள்ளித் துள்ளித் துடிக்கு மனத்தை
மெள்ளப் பிடித்துன் னுள்ளத் தடைப்பாய்.
பெண்ணிலும் பொருளிலும் பேய்போ லலையும்
கண்ணைச் சிமிட்டிக் கறங்கெனத் திரியும்
வம்புகள் விலைக்கு வாரி வாரிவீண்
கும்பலாய்க் குவிக்குங் கொடுமனக் குரங்கு,
எந்தை யடியி லிணைத்திம் மனத்தைச்
சிந்தனை யற்றுச் செய்வன செய்வாய்.
அமர்ந்த சித்தமும், அடங்கிய வுள்ளமும்,
தமராஜ சத்துவத் தளையறு சமமும்,
ஆறுகள் பாய்ந்தும் அலைகட லிருக்கும்
ஆறுபோ லகண்ட வமைதிப் பெருக்கும்,
குறைவறு நிறைவெங் குன்றென வுறுதியும்
சிறையறு வாழ்வுந் திருவருட் கலப்பும்
நீரிற் படகெனப் பாரினி லிருந்தும்,
பார்தனக் குள்ளே பற்றுத் துறவும்,
சாற்றுஞ் சடனுஞ் சதிருஞ் சனனும்
வேற்றுமை யின்றி வேலைசெய் வதுபோல்,

இருவிகற் பின்றி யியன்றது புரிந்து,
வருபயன் கருதா வளர்பணி வேள்வி.
உலகின் இசைவசைக் குட்படா தருந்தேன்
மலரில் வண்டென வாழுத லறமே.
அறிஞரை யெளிதில் அறியா துலகம்.
அறிஞரும் உலகின் அறிமுகம் வேண்டார்.
உன்னுள் அடங்கி யுன்னை நீ திருத்தாய்.
தன்னை யறிந்தாற் பின்னிட ரில்லை.
தானே தனக்குத் தலையும் பகையும்
தானே தனக்குத் தருநல மெல்லாம்.
உனக்கு நீதா னுண்மையா யிருந்தால்,
மனக்கி லேசம் மாய்வழி யதுவே.

## வாழ்வுநெறி.

அருந்தல் பொருந்தல் அனந்தல் அளவுடன்
திருந்த மேற்கொள்; மருந்தது வாகும்.
பசித்தீக் கினிய பாத்தூண் விருப்பு.
நசைவாய்ப் பட்ட நச்சுத் தீனி
நோய்தரும்; மேனி நுடங்கா திருக்கத்
தூய நினைப்பும், தொண்டொடு தொண்டர்
நேயமும், நல்ல நிறைமுறை வாழ்வும்,
ஏயதோர் பயிற்சியும் இசைந்தவா றியற்றாய்.
கண்மயக் காலே கருத்து மயங்கிப்
பெண்ணாண் பேதம் பிறந்தது காணாய்.
ஆணைச் சிவமாய், அரிவையைச் சிவையாய்,
பாலுறக் கருதாய்; மாசறு மெண்ணம்,

இணைபிரி யாமல் இறைவ னருளாம்
உணர்வொடு வாழலே யோகம தாகும்.
உள்ளுணர் வாலே யோகக் கனல்வளர்.
வெள்ளமா யின்பம் விரிந்துனைச் சூழும்.
தனித்திரு; விழித்திரு; தான்றன தற்றிரு;
மனத்தின் மாய மயக்குக ளொழியும்.
அற்றம் பாரா தகத்தினைப் பாரு.
சுற்றம் பாராச் சுழிமுனைப் பாரு.
புருவ நடுவே பொருந்தப் பாரு.
இருத யத்தில் இருந்துனைப் பாரு;
பொறிவாய்ப் படாதுன் னறிவாயிருந்திடு;
நிறைபெறுந் தூய நித்திய னந்தம்;
கால தேசக் கட்டுகள் பற்று.
ஆலய முலகாம்! ஆடலே வாழ்வாம்!
இறைவனுக் கிந்த நிறையன் புயிரை
இறைவ னருளே யின்புற நடத்தும்.
† ஈந்துளக் காதலால் ஈரறக் கலந்து,
வாய்ந்தரு ளின்பம் வாழிய வெல்லாம்.



---

† தன்னைக் கடவுளுக்கு நிவேதித்து;

# இன்பமாலை.



## 2

### அனுபவம்.

ஏட்டுச் சோறு வாட்டந் தணிக்குமோ?
வாட்டந் தணிப்பது வாரியுண் ணமுதம்.
படத்தி லெழுதிய பலாக்கனி யினிக்குமோ?
நடத்தை யின்றிப் படித்தது பயனா?
காசி யென்றாற் கங்கை பொங்குமோ?
பேசிப் பேசிப் பெரும்பசி தீருமோ?
உரையை விழுங்கி, யுலம்பறு மனத்தில்;
கரையறு மோனக் கடலிலம் மனத்தை
ஆழ்த்திடி னாங்கே யகப்படு முத்து,
காழ்த்திடு மாசை வீழ்த்திடு முன்னே.
ஓடாப் புலனுந், தேடா மகிழ்வும்,
ஆடா விளக்குபோல் அமர்ந்தெரி யறிவும்;
கோடா வுறுதியும், வீடா வுறவும்,
நாடா யுன்னுட் கூடா யுன்னை!

### பலவாம் உலகு.

சுற்றிலுங் காணாய் சுற்றுல கத்தைச்
சற்றுநீ தனியே சார்ந்து நினைப்பாய்:—

பலபல தேசம்; பலபல மக்கள்;
பலபல சாதி; பலபல சமயம்;
பலபல வாதம்; பலபல போக்கு;
பலபல தெய்வம்; பலபல கோத்திரம்;
பலபல நடையுடை; பலவகை யுலகம்;
எத்தைச் சார்வாய்! எவ்வழிச் செல்வாய்?
மத்தலை தயிரென மயங்குது மனமே.
அன்றின் றென்று காங்கிங் கென்று
தென்று மிருந்தவா றிலகுவ துண்மை.
உலகைப் பார்த்தாற் கலகம் பெருகும்;
உலகைப் பாரேல்; உன்னையே பாராய்.

## ஈரறக் கலத்தல்.

பாருயி ரிறைவன், பாசம், பசுபதி
ஈரறக் கலக்கின் இன்பமொன் றேயாம்.
காதலன் வேறு; காதலி வேறு;
காதலிற் கலக்குங் களிப்பொன் றேயாம்;
திரிநெய் வேறுந் தீபந் தனியே;
எரிசுட ரெழுந்தால், இன்னொளி யொன்றும்.
ஆழி வேறும், ஆறும் வேறும்;
ஆழியிற் கலக்கின் அலைகட லொன்றும்.
ஒன்றுபட் டாலே யுவப்புணர் வாகும்.
ஒன்றிரண் டென்னும் உரையங் கிராது.
புதுமலர் சுற்றிப் பொம்மெனும் வண்டு;
மதுவுணும் போது மௌனம் வகிக்கும்.
ஊடலால் அலையும்; கூடலால் அடங்கும்
ஆடலில் ஆடும் அடங்கா மனமே.;

## மனோ ஜயம்.

நிறத்தைப் பார்த்துப் புறத்தைப் பார்த்துப்
பரத்தை மனது பகடை யாடுது.
அதனை யுள்ளே மெதுவா யிழுத்தால்
மதனை யெரிக்கு நுதல்விழி திறக்கும்.
மனவெறி யெரிப்பதே மன்மத தகனம்.
சினவெறி நாசமே திரிபுரச் சிரிப்பு.
முன்னிலை யின்றித் தன்னிலை யிருப்பே,
பன்னிலை யுலகப் படரொழி வழியாம்.
படித்த படிப்பெலாம் பாழுக் கானது.
படித்ததை யில்லை; பார்த்ததைப் பகர்வேன்.

## உள்ளம்.

கணகண வென்று காந்துது காந்தத்
தணலுட லெல்லாந் தகதக வென்றே.
உள்ளக் குகையாம் ஓம்குண் டத்தில்,
வெள்ளைச் சுடரொளி வீறுற் றேறுது.
அதனை வளர்ப்பதே யருந்தவ வேள்வி;
அதன்வெளி காண்பதே யம்பலக் காட்சி.
கருத்தி லொளிருங் கதிரவ னெழுந்தால்,
கறுத்த மாயக் கங்குலெங் கிருக்கும்?
உள்ள முன்னைத் துள்ளி யழைக்குது.
விள்ளறு மின்ப விண்ணக மதுவே.
ஆழி யுள்ளத் தரிதுயில் கின்றான்.
ஆழி யுள்ளமே யமுதப் பொற்கலம்;
தன்னிலை திரியாத் தடங்கடல் போலே,
உன்னிலை யூன்றாய்; உலகத் தரங்கம்

௫௰.

ஏறும் விழும் எழும்பும் உறங்கும்;
மாறு தாழ்ந்த வாய்மையா யிருப்பாய்.
மேகப் படலம் விசைவிசை மாறும்;
ஆகா யத்திற் கழிவது முண்டோ?
வானமு நீல வண்ணமும் போல
ஞானத் துடனே ஞானியு மொன்றும்.
ஓடை வேறு? ஓட்டம் வேறு?
ஆடையிற் பாவும் ஊடும் வேறு?
உறுதியும் அன்பும் உண்மை யார்வமும்
செறிவழி பாட்டாற் சித்துள் ளுணர்வாம்.

## தத்துவம்.

அருட்பெரு நூல்களுட் பொருட்சுவை யொன்றே.
சுருட்பெறு வாதம் இருண்மன மாயம்;
வித்தை வேண்டுவோர் புத்தகம் பயில்க.
சத்தை வேண்டுவோர் தன்னுளா ராய்க.
இன்பம் வேண்டின் இதயம் பற்று.
வம்பு வேண்டின் வாதிக ளிடஞ்செல்.
நன்மை தீமை மென்மை வன்மை
அன்மை செய்மை அறமற மென்றே
எதிரெதிர் நிற்கும் இருவிகற் பூடே,
மதிபெறு ஜீவ வளநதி பாயும்;
கரையின் அணையின் கட்டுக ளின்றி,
விரைந்து கலந்து விரிகட லாவதே,
உயிராற் றிற்கிங் குறுநல மாகும்.
பயிர்களை வளர்த்தும் பாய்வது கடலில்.

† ஐந்தாம் பூதம் ஐந்தா மாத்திரை;
ஐந்தாம் வினைப்பொறி; ஐந்தாம் உணர்பொறி;
புத்தி மனமொடு சித்தம் அகந்தை
இத்தகைத் தத்துவம் இருபத்தி நான்காம்.
இருபத் தைந்தா மியர்புவர் ஜீவனை;
இருபத் தாறும் இலகுசுத் தான்மா. 230
§ உடலுயிர் மனமறி வுயரின் பைந்து
திடமதில் சூழத் திகழுனன் ஆன்மா.

---

† 1. ஐம்பூதங்கள்—வான், காற்று, தீ, நீர், மண்,
2. தன்மாத்திரைகள் 5:— ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்.
3. வினைப்பொறி (கர்மேந்திரியம்) 5: வாய், கை, கால், குதம், குறி.
4. உணர் பொறி (ஞானேந்திரியம்): உடல், நாக்கு, மூக்கு, காது, கண்.
5. புத்தி, மனம், சித்தம், அகங்காரம் இந்நான்கும் அந்தக்கரணங்கள் (உட்கரணங்கள்.)

---

§ இவ்விரண்டு வரிகளும் பஞ்சகோசத்தைப் பற்றி யுரைப்பன:—
1. உடல், அன்னமயகோசம், தூலதேகம்.
2. உயிர்: பிராணமயகோசம், வீரிய தேகம்.
3. மனம்: மனோமயகோசம், சிந்தனை யுலகம்.
4. அறிவு: விஞ்ஞானமயகோசம், (அருளறிவு.)
5. இன்பம்: ஆனந்தமயகோசம், அருளின்ப நிலையம். இவ்வைந்து கோசங்களைக் கடந்து ஆன்மா சத்து—சித்தாய். (உண்மையறிவாய்) உள்ளது,

* தூலம் காரணம் சூக்கும மென்றே
மேனு மவற்றை விரிப்பர்வே தாந்திகள்.
‡ சக்தர் சைவர்முப் பத்தா றென்பர்;
அத்தையும் யாதென் றறிவாய் மகனே:—
பூதம் மாத்திரை பொறிபுலன் கரணம்
ஆதி யியற்கை அறுநான் கென்பர்;
கஞ்சுகை ஐந்து: காலமுங் கலையும்
எஞ்சறு வித்தை யிராகம் நியதியாம்.

---

* அன்னம், பிராணன்: இரண்டும் தூலசரீரம், பருவுடல்.
மனம்: சூக்ஷ்மசரீரம், நுண்ணுடல்.
விஞ்ஞானம் ஆனந்தம்: காரணசரீரம் (அறிவுடல்)
இவற்றின் விளக்கம் யோகசித்தி, கீதை, ரமணவிஜயம், பாரத சக்தி முதலிய நூல்களிற் காண்க.

‡ முப்பத்தாறு தத்துவங்கள்:—

1. இயற்கைத்தத்துவம் (ஐம்பூதம்) † ஐம்புலன் † அறிபொறி 5 † வினைப்பொறி 5 † உட்காரணம் 4=24
2. அசுத்தமாயை:— காலம் கலை நியதி வித்தை, அராகம். (இவைகஞ்சுகை), மாயை, புருடன்=7
3. சுத்தமாயை: நாதம், விந்து, சதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை இவற்றின் முழு விளக்கமும் யோக சித்தியிற் காண்க.

நானிது வென்பர், நாதம்விந் தென்பர்,
ஞானிக ளுக்கெலாம் போன முடிவே.
சாற்று மீச்வர தத்துவம் விந்தாம்.
சாற்றும் சாதாக்கிய தத்துவம் நாதமாம்.
உன்மினி சமனி யுயர்சக்தி தத்துவம்.
பன்னற வுயர்ந்தது பரசம் வித்தாம்.
நிகழ்ந்த மதுவே நிர்க்குண ப்ரஹ்மம்.
சுகக்கனி யதனைச் சுடருறக் கலத்தல்.
அப்பனே யிச்சொல் லடுக்குக ளெல்லாம்,
செப்பி விளங்கா சென்மநூ றெடுத்தும்.
இந்தப் பேச்சை யிகந்த பிறகே
சொந்த மான சுகப்பொருள் காண்பாய்.
தத்துவப் பேயுடன் சண்டைபோட் டலையேல்.
வைத்தவா றுள்ளே வாய்மையில் வாழ்.

## ஆத்மராஜன்.

மன்னனைக் காண மகிழ்ந்து செல்லுவோன்,
சன்ன லித்தனை, சவுக்க மித்தனை,
அரண்மனைச் சார்ந்த புரங்க ளித்தனை,
திரள்பெரு சேவகர் செலவுக ளித்தனை,
என்று கணக்கிட் டிழப்பனோ காலம்?
நன்றிதை யாராய்; நலமிதென் றோராய்.
அரசன் உள்ளத் தரியணை கொண்டான்.
முரசொலி ஓமென முழங்கு கின்றது.
இனியன் இன்பன் இறைவன் அரசன்.
இனிவே றெண்ணு திருக்கை யறிந்து
இதயத் தவனைக் கதுமெனக் கூடு.
விதவித நூல்களும், வதவதப் பேச்சும்,

விதவிதக் கேள்வியும் வீண்பொழுதாகும்.
வெதுவெதுப் பான மதுவுள் ளூறுது.
சாவை வென்று சடலம் நிலைக்க
மேவுரை பலப்பல விளம்புவர் சிலபேர்.
உடலுயி ரெல்லாம் உடையா னிடமே
திடமுடன் விடுப்பாய்; திருவரு ளிச்சை
அடிமையை நடத்துகென் றிடையறா தியப்பு;
குடிப்புகுந் தன்னுட் கூத்தனா டுவனே.
"பொன்னாக் கினுஞ்சரி, மண்ணாக் கினுஞ்சரி,
நின்னாணைவழி நிற்பெதென் னுறுதி.
நினக்கா ளாகி நின்னையே நம்பினேன்,
எனக்கென வுடலுயிர் எதுவுமிங் கில்லை.
எல்லாம் வல்லோய் என்னா லென்னே.
எல்லாந் திருவருள் இச்சை நடத்துக,"
என்றிருப் பதுவே நன்றிருப் பது; தனை
வென்றிருப் பதுவே என்று மிருப்பதாம்.

## அமுதநாடி.

உள்ள முதலாய், உச்சி மட்டும்
ஒள்ளிய அமுதம் ஓடுது நாடி
அதனொளி யுள்ளம் வெதுவெதுப் பாகும்.
அதனொளி நெற்றியில் அவிர்சுட ராகும்.
உள்ளத் தின்பமாம்; உச்சியில் அறிவாம்.
தெள்ளத் தெரியுந் திருவரு ளுணர்வால்;
வாரியி லெழுந்த வடவைக் கனல்போல்,
நீரி னிடையே நெருப்பங் கென்பர்.
எற்குணர் வானது சிற்கன லறிவு;
சிற்கன லாலோர் சிற்சுகம் பிறக்க,

௩௫.

அத்துட னதுவாய் ஆங்ஙனே யுள்ளேன்.
தத்துவ வாதம் சங்கட மெனக்கு.
மௌனமே யென்றன் மாவுப தேசம்.
மௌன மென்பது மனமடைப் பதுவே.
நின்றா லுள்ளே நித்திய வின்பம்.
சென்றால் வெளியே செகவிவ காரம்.
ஒன்றே யுண்மை யுரைத்தே னிதனை.
நன்றாய்த் தெளிந்து நடத்லுன் கடனே.

## 3

### அவனே யான்மா.

பேசுவ தெல்லாம் பெயருருப் பான்மை;
காசு பெருதிக் கசுமல வாதம்.
அப்பனே கேளாய், ஒப்பிலாப் பரமன்
இப்பா ருயிர்களின் இதயத் துள்ளான்;
அவனே யான்மா; அவனே ஜீவன்;
அவனே இயற்கையால் ஆற்றுவ னனைத்தும்;
சதிரு மவனே; கதிரவ னவனே;
சதிரொளி வளர்க்குங் கண்ணில மவனே.
அவனை யன்றி யணுவுமின் றென்னில்,
அவனைத் தப்பி ஆருயி ரெங்கே?
ஆன்மா ஜீவன் அவன்மய மாகும்.
ஆன்மத் தெளிவால் அவனைத் தெளிவாய்.
ஆன்மா வாகவே யனைத்திலு மிறைவன்
தான்வே றாகாத் தன்மையோ டுள்ளான்.

### ஆன்மத் தெளிவு.

தங்கச் சுரங்கம் தங்கி யெடுப்பது
பங்க மில்லாத் தங்கக் கட்டியோ?
எத்தனைக் களிம்புட னியமுஞ் செம்பும்
பொருத்தமாய்ச் சேர்ந்த வத்துவா மதுவே.
எடுக்க வதனை யெத்தனை முயற்சி!
வடிக்க வதனை வகைவகை யந்திரம்,
ஆலைக ளெத்தனை. வாலைக ளெத்தனை!

வேலைக ளெத்தனை! விரிப்பிற் பெருகும்.
மனிதான் மாவோ மாசுறு கட்டி
இனிதனை மாசறுத் திலகுபொன் னாக்க
அன்பா லுருக்கி யருண்மெரு கேற்றித்
தன்பாற் காணும் பொன்பா ரப்பா!
மாசுறு பொன்னே மாயைசூ ழான்மா.
மாசறு பொன்னே தேசுறு மான்மா.
மக்குத் தங்கம் மாசுறு ஜீவன்
சொக்குத் தங்கம் சோதிசுத் தான்மா.
படித்ததை யில்லை, பார்த்ததைப் பகர்வேன்;
தடித்தமா சற்ற தானே யிறைவன்.
இம்மி யதனிற் கம்மியொன் றில்லை.
வம்மினுள் ளாழ்ந்து வாய்மை காணுமின்!

## இருப்பிடம்.

இருப்பிட மதனை யியம்பிடக் கேளாய்:
ஒருப்படு முள்ளமே யிருப்பிட முனக்கு.
உன்னையின் னொருவன் உரக்கப் பேசினால்,
என்னையா பேசினாய்? என்னையா பழித்தாய்?
யானுனைச் செய்வதி யாதெனப் பாராய்!
யானார் தெரியுமா? யான்பக தூரென்
றெங்குநீ கையை யிறுமாந் துறுத்துவாய்,
அங்குநீ யான்மா; தங்கிட மறிவாய்.
அங்கே யகந்தை யானெனக் கிளப்பும்;
அங்கே யறிவால் அகந்தலை குனியும்;
நானெனக் கிளப்பும் நசுவல் மனத்தை,
ஏனெனக் கேட்டு மோனத் தடியால்
'நீயா ரெங்கென் னிலையத் துற்றாய்?

நேயன் போலே நின்றெனைக் கெடுத்தாய்;
என்னைத் திரையே யெழுப்பா தேநீ;
தின்னமா யுன்னைத் திட்டுவேன் பாராய்,'
என்றதைப் போட்டால் ஒன்றுஞ் சொல்லா
தன்றே யடங்கி யகந்தை யழியும்.

### தான்: நான்.

இரண்டு சக்திக ளிருக்குன வுள்ளே;
முரண்டு செய்யு மூட மனத்தால்,
புரண்டலை நானெனும் பொய்யகச் சக்தி;
வரண்டதுர் தானெனும் வாய்மை விளங்கும்.
நானென் பதெலா நலிமன வகந்தை;
தானென் றெழுவதே தவசிவ சக்தி;
நானெனக் கிளப்பிற் றானது மறையும்.
நானது பணியிற் றானது விளங்கும்.

### முப்பாழ்.

ஐந்து கோசமும் யானெனுங் கோட்டைகள்;
ஐந்து கோசத் தப்பா லுள்ளதே
மன்றுள் வெளியாம்; மனமறு பாழாம்;
நன்று யிதனை நின்றுள் ளுணர்வாய்.
முப்பா ழென்னு மொழிசித் தாந்தம்,
முப்புடி யென்னு மொழிவே தாந்தம்.
உலகுயிர் இறையெனப் பலவித மான
கலகுறு மனத்தை யிலையென நசித்தலே
முப்பாழ் கடந்து † முப்புடி யற்றே
யெப்போ துந்தா னிருந்தவா றிருத்தலாம்,

---

† முப்புடி=திரிபுடி; முப்புரி மாயை; ஆணவம் மாயை காமியம்.

# இன்பமாலை.



## 4

### தன்னிலை.

சினமக மாணவச் சிக்குக ளொழிந்தால்
மனமறும்; ஆங்கே மன்றுள் வெளியாம்.
கலைமனப் பூதக் கண்ணா டியிலே
பலவாய்த் தோன்றுது பாரிறை யுயிரே.
அகந்தை மனத்தின் ஆணிவே ரகன்றால்
உகந்தது வாகும் ; உன்னைநீ காண்பாய்;
உன்னைக் கண்டால் உலகுயிர் வேறிலை;
தன்னை விடாத தனிநிலை யின்பம்.
தன்னை மறத்தலே சாதலென் றறிவாய்.
தன்னை நினைத்தலே சத்திய நிலையாம்.
உன்னைநீ யறிந்தாங் குண்மைநீ யாகித்
தன்னிலே தானாய்த் தனித்திருந் தக்கால்,
பின்னுனக் கென்ன? பேசுமோ மனது?
தின்னுமோ மாயை? நண்ணுமோ விகற்பம்?

### மந்திரம்.

மந்திர மென்பது வாயுரை யல்ல;
தந்திர மல்ல; சாற்றுவேன் கேளாய்:
மனதுளத் தடங்கி மாசறு நிலையில்,
எனதியா னென்று திருக்குமந் நிலையில்,

மண்டையி லுள்ள மடல்விரி மலரில்,
வண்டு போலும் வாரியே போலும்,
வீணை போலும், மிருதங்கம் போலும்,
மாணவும் ஓமென வழங்கிடு நாதம்.
அந்த நாதமே மந்திர மாகும்.
அந்த மந்திர மந்தரங் கத்தே,
எந்தவா றொலிக்கும் அந்தவா றறிஞர்
மந்திரக் கலையை வகுத்தன ரென்ப.
சாமி யொன்றே; சக்திகள் பலவாம்.
நாமமா யிரங்கள் நாட்டிப் பணிகுனர்.
அழகன் இன்பன் அறிவன் முருகன்
குழகன் உலகெலாங் கும்பிடும் பெருமான்
கண்ணன் அரங்கன் கனக சபேசன்
எண்ணிலா திவ்வா றியப்புவர் பெயர்கள்.
கலைமகள் இலக்குமி காளி பவானி
நிலமகள் என்று பலதிறஞ் சொல்வர்.
எதனை நினைக்கினும் இறைவனை நினைத்தலாம்.
எதனைப் பணியினும் இறைவனைப் பணிதலாம்.
கதிரவ னொன்றே கதிர்கள் கோடி.
கதிரைக் கண்டாற் கதிரொளி புலனும்.
மனதும் பலபல மாந்தர் பலபல;
எனதே கொள்கையென் றியம்புதல் மடமை.
இருப்பதொன் றாயினும் இஷ்ட தெய்வமென்
றிருப்ப தவரவர் இதயப் பான்மை.
எவ்வகை மனத்திற் கொவ்விய வடிவோ
அவ்வகை யவரவர் அமைத்து வணங்குனர்.
வணக்கம் பலவாம்; மந்திரம் பலவாம்
குணக்க மின்றிக் குறிப்புடன் ஓதின்.

வரும்பயன் பெரிதாம்; மனதுட் குவியும்;
அரும்பய னாகும்; ஆதலாற் கேளாய்:—
வேதச் சுருக்கம் விளம்புகா யத்ரி;
ஓதிடின் எல்லாம் ஓமில் அடங்கும்.
ஓமெனு மந்திரம் உலகெலாம் பொருந்தும்;
ஓம் தத் ஸத்தெனும் ஒள்ளிய வேதம்.
அகர வுகர மகரம் ஓமாம்;
சகபர ஜீவன் அகமென் றதுவாம்;
விழிகன வுறக்கம் வேறிலாத் துரியம்
மொழியறு மோனம்; மொழிவ ரிதன்பொருள்
எந்திர மொன்று தன்னொழி லாற்றுழி,
மந்திர மொன்று வாய்திறந் துரைக்கும்.
சிற்கனல் பாய்ந்து சிவ யந்திரம்
அற்புதஞ் செய்யுழி, அகர மொலிக்கும்.
அதையே கவனித் ததிலே லயமாய்
மதுவுண் வண்டுபோல் மௌனத் திருக்கலாம்.
எந்த மந்திரம் இயம்பினு மொன்றே.
சிந்தைத் தூயர் சித்தி யெய்துவர்.
மந்திரம் போடல் மனத்தின் வேலை.
மந்திர முதிக்கது மனமுதி யிடத்தில்.
மந்திர மடங்கும் மனமடங் கிடமே.
மந்திரப் பாய்பு மௌனத் தடங்கும்.
தன்னை யறிந்தால் தானே ஜபமாம்.
தன்னைக் கண்டால் தானே இன்பம்.
தன்னை விடுத்தோர் அன்னியங் காண்பர்.
அன்னியங் காணின் ஆணவக் கலகம்.
தருக்கம், வாதம், மருத்துவஞ் சோதிடம்,
இருக்கு மட்டும் இன்பம் வராது.

ஆதலால் மகனே தீதறு நெறியை
ஒதுவேன் கேளாய் உள்ளன் புடையாய்!
தன்னை யறிவதே முன்னறிவாகும்.
தன்னை விடுத்த தத்துவம் வீணாம்.
தன்னை யறிந்து தானா னோர்க்குப்
பின்ன ரெதுவும் பெச்சுமூச் சில்லை.



# இன்பமாலை.

## 5

### உலகிடை வாழ்வு.

உலகிடை யிருந்தும் உலகினி லொட்டா
நலமுடை வாழ்வை நவிலெனக் கேட்டாய்:
வெண்பா லுள்ளே விரவிய நெய்போல்
தன்பா லுள்ளது தத்துவ மெல்லாம்.
உள்ளத் தாழியில் வெள்ளை மனத்துடன்
கள்ளன் கரந்துளான் காதலாற் கவர்வாய்.
ஆர்வத் துளியை யதிலுறை குத்து.
ஓரிடந் தனியே யுலம்பா திருத்து.
தனிமௌ னத்திலே தயிராம் பாலே.
இனியதி னினிய தியம்பாத் தியானம்.
காலையில் விழித்துக் கடைநட் பாலே.
வேலைத் திரைபோல் விம்மிடு மன்பு.
ததிபோ லிந்தத் தாரணி வாழ்வு.
அதிலே யொட்டா தாங்குறும் வெண்ணெய்.
அதுபோ லப்பனே யகிலவாழ் வினிலே,
மிதக்க முடியும் மெலிவினை யின்றி.
நாடகந் தனிலே நடனா னந்தன்
ஆடுவன் வாடுவன் அரிச்சந் திரனாய்.
ஆடுவ துடையே வாடுதல் வேடம்.
நாடி யுள்ளே, "நான்நட ராஜன்
கட்டு கடனெனக் கிட்டி போட்ட
துட்டப் பார்ப்பான் துன்பெனக் கில்லை.
கடுமனப் பார்ப்பான் கால கண்டனின்

கொடுமைகள் என்றன் றுணைவதிக் கில்லை.
எனக்கிலை மயானப் பிணஞ்சுடு வேலை.
எனக்கிது நடிப்பே," யென்றனர் வானால்.
இதுபோ லப்பனே யிவ்வுல கினிலே
பொதுவுற நோக்கிப் போலி யாடலை
உள்ளே தெளிந்தங் குறைவா யன்பா;
மெள்ள மெள்ள வெள்ளி வெளிறும்.
உள்ளியை யுரித்தால் எல்லாந் தோலே;
கள்ள வுலகின் கனவாழ் வதுவே.
அரசொன் றாளும்; அரசொன் றாழும்;
அரசொன் றடர்க்கும்; அரசொன் றடங்கும்.
உள்ள மட்டும் உண்மையா யிருப்போம்.
உள்ள பொருளில் ஊன்றி யுலாவுவோம்.
பிறதெலாம் இறைவன் கருதிய வாறே
வரும்போம் நமக்கவ் விருவிகற் பில்லை.
என்றான் வாழ்வி லெடுத்தது முயன்று
நன்றா னுள்ளே நின்று நிலைப்பாய்.
பாரா யன்பா பாவையர் தலையில்
நீர்க்குடஞ் சுமப்பர்; நீள்கரம் வீசுவர்,
வீட்டுப் பேச்செலாம் வாட்டமாய்ப் பேசுவர்;
நாட்டுப் பேச்சு நவிலுவர் நகைப்பர்;
கவன மெல்லாங் குடத்தி லிருக்கும்.
அவரிடம் உண்மை யறிவா யன்பா.
சித்தந் தன்னைச் சிவத்தினி லூன்று.
எத்தொழி லாற்றினு மிருவிகற் புறாதே.
நல்லது பொல்லது நாளும் நடக்கும்.
எல்லாம் சாட்சியாய் ஏங்கா துள்ளிரு.
ஐயனே பாராய் வெய்யவன் றன்னை:

வையகந் தன்னில் வாழ்த்துவர் பலபேர்.
ஐயோ வெய்யிலென் றலறுவர் சிலபேர்.
வெய்யவ னுக்கெதும் விசார முண்டோ?
உலகொரு தடாகம்; ஒண்மதி யதிலே
நிலவுது நீருடன் அலைகுது காணாய்.
தண்மதி யோதுந் தரங்கத் தலைந்தால்
விண்மதிக் கேதும் விகார முண்டோ!
நீதான் ஆன்மா நிலவா னறிவில்
போத மயமாய்ப் பொலிகுனை யப்பா!
உலகத் தடத்தில் உலப்பு மலைகள்
இலையுனக் கெல்லாம் ‡இருமனத் திற்கே.

## 6

### மயக்கறல்.

ஐயோ வுலகின் அசட்டுத் தனங்கள்
பொய்வே டங்கள் புகலப் படுமோ!
வாயாற் சொன்னால் வம்புதான் மிச்சம்.
தூயா ரதனாற் சொல்லா தடங்கினர்.
கண்ணா டிகளாற் கவின்செய் வீட்டின்
உண்ணா டியதோர் ஊத்த வெறிநாய்.
சுற்றும் பார்த்தது சுவான நிழல்கள்.
பற்றல ரென்று பாய்ந்தது மேலே.
நிலைக்கண் ணாடி நிழற்றிய நாய்களும்,
குலைத்தன குதித்தன குரலெடுக் காமல்.

---

‡ இரு விகார மளம்.

துள்ளிக் கடித்தது; தோற்றமுங் கடித்தது.
உள்ள தில்ல துணரா மையினால்,
பொய்நாய்க் கூட்டம் போலிப் போர்தர
மெய்நா யின்னும் வெறிமே லேறிச்
சில்லுசில் லாயின சிலைக்கண் ணாடிகள்.
பல்லுவா யெல்லாம் பாறிடக் குருதி.
வீட்டுத் தலைவன் விரைந்துகோல் கொண்டு.
ஓட்டி நாயை யுரைத்தா னிங்ஙனே:—
"அறிவிலி நாயே, ஆன்ம நிழல்களை
வெறியுடன் பொருதி வேதனைப் பட்டாய்;
உன்னைப் போலவே யுலகிலும் மனிதன்
தன்மயந் தன்னைப் பன்பய மாக
மயங்கிப் பொருதி வாதம் புரிந்து,
நயங்கெடு கின்றான் நாயினுங் கேடாய்."
அப்பனே யிந்த வொப்பினை யறிவாய்.
செப்பினுங் கல்லினுந் தேடித் திரியேல்.
கொழுத்துத் திரியுங் குலைநாய் மனத்தை
இழுத்துள் ளடக்கி யிருவிகற் பறுவாய்.
உள்ளந் தனிலே யொளிபெற வொளிந்த
கள்ளனைக் கருதிக் கருதிப் பற்றாய்:
ஓசைப் படாமல் உரையெலா மடங்காய்.
ஆசைப் பாடமல் அகமலை யாமல்
தன்னைக் கலந்தோர் தான்றா னாவார்.
தன்னொளி விரிவே பன்னிற வுலகம்.
எத்தனை கருதல் எத்தனை யுரைத்தல்
எத்தனை யளவை எத்தனை யொப்பு
ஐதிகம் சம்பவம் அபாவம் சுபாவம்
வைதிகம் சாத்திரம் வாய்ப்போரெல்லாம்

காட்டிடா திதனைக் கண்டு கலந்தால்
வாட்டந் திர வாய்த்திடுஞ் சுகமே.
கண்ட பின்னுங் கலந்தினி துறவே
தொண்டர் கதறினர் தோத்திரம் பலவே,
இன்ப துன்ப மிருகரை வழியே
தன்பொரு ளகண்ட தத்துவக் கடலை
நோக்க நோக்க நுட்பம் விளங்கும்.
நீக்க மின்றி நிறைபெறு மின்பம்.
தம்மை யுணரார் சாத்திர வாதம்
பொய்மைக் காதலர் புரிமணம் போலாம்,
தம்மை யுணர்ந்தார் சாற்றும் மோனம்
மெய்மைக் காதல் விளைத்த சுகமாம்.
அவமனக் கட்டற் றுன்மா தூய
சிவமய மாதலே சிவன் முத்தி.
அறிவைக் கொண்டே யான்மா வைந்து
பொறியைக் கொண்டைம் புலன்களை நுகரும்.
சிந்தையற் றுள்ளே தெளிந்தமர் சித்தைச்
சந்தியி லிழுப்பது சங்கட மனப்பேய்.
திரிந்துணர் அறிவு சிதறிப் போகும்.
இருந்துணர் அறிவே பொருந்திய தாகும்.
உலகவா தங்களில் உலப்புனர் மாந்தர்.
கலகந் தவிரக் காரிய மில்லை.
கண்முன் னுள்ளது காரிய வுலகு,
உண்மை யதுநீ, யுள்ளமட் டதனில்,
உள்ள மட்டும் உண்மையாய் வாழ்வைத்
தெள்ளிய தாக்கிச் சிவக்கலப் பெய்தாய்.
புகையு மிடத்திற் பொலியன லுண்டு;
சகமுள விடத்திற் சாமியு முண்டு.

பஞ்ச பூதப் பஞ்சரத் துள்ளே
துஞ்சா துள்ளது சுத்தக் கிளியே.
உணரார் புணரார்; புணரார் நசரார்.
உணர்ந்த புலவர்க் குரைநூல் வேண்டா.
தன்னை யுணர்க; தன்னுடை யானைத்
தன்னி லுணர்க; தத்துவ மதுவே.
ஆணைச் சக்கிரத் தாடுது களிமன்.
பானை செய்யும் பரமக் குயவன்
மாயப் பானை வடிவ மைத்தபின்
தோயா திருக்குஞ் சுதந்திரங் காணாய்.
அவன்செய லின்றி யசையா துலகம்,
அவன்சந் நிதிக்கே யைந்தொழி லாகும்.

## பேரியாரியல்பு.

பெரியா ரியல்பைத் தெரியா துலகம்;
† அரியார் தம்முள் அடங்கி யிருப்பர்;
கடபட வென்று படிநூ லளவார்;
படபடத் தெதுவும் பகட்டிற் கியற்றார்.
உலகைச் சுருண்டும் உள்ளைச் சுலையார்.
மலைகுலைந் தாலுமனங்குலை யார்கள்.
அச்ச மென்ப தணுவு மறியார்.
துச்ச மான தூறுகள் பேசார்.
காதக ராயினுங் காதல ராயினும்.
பாதக ராயினும், பண்டித ராயினுந்
தன்னைக் கொல்லுந் தறுகண ராயினும்,

---

† அருமையான ஞானிகள்.

இன்னிதி னன்பே யிதமா யுரைப்பர்.
சந்தை நடுவிலுந் தனிமை காண்பர்,
வந்ததில் மகிழார் ; வாராதகற் கேங்கார் ;
இறைவன் கட்டளை யின்னதென் றறிந்து,
நிறைவேற் றியதும் மறைகுவர் மின்போல்.

## காரண காரியம்.

காரண மின்றிக் காரிய மில்லை.
காரிய மில்லேற் காரணப் பேச்சேன்?
பருத்தி யில்லேற் பாவுறா வில்லை.
கருத்தா வில்லேற் காணுல கில்லை.
ஆன்மா வில்லேல் ஆருட லில்லை.
தானென் றில்லேல் தத்துவப் பேச்சேன்?
தண்ணிலை யெனிலோ தாமரை யில்லை
விண்மழை யில்லேல் விளைபயி ரில்லை;
தந்தைதா யில்லேல் தனயனு மில்லை;
இந்த விதமா யெண்ணிநீ பாராய்.

## பெயர்.

வாதச் சமய வழக்கிற் கப்பால்
ஆதிப் பழம்பொரு ளறிவிற் புலனும்
உறுதியாய் நம்பாய் உலகுயிர்த் தோற்றமும்
இறுதியு மதனரு ளிச்சையென் றுணராய்.
இன்ப மமுதம் என்று முள்ளது,
துன்ப மறுப்பது சுட்டற் றதுவே.
தானே தானுந் தன்னருள் விரிவால்

வானும் புவியும் வளர்க்கும் பொருளாம்.
சிவ சாட்சியாம் சிவனென் பதுவே.
நாவுங் கண்ணும் நாடா மனமும்.
எப்படி வேண்டு மென்னினும் போற்றி
அப்படி பதனி லன்பு பூண்டிரு.
சுத்தன் சத்தியன் சுதந்திரன் சோதி,
முத்தன் நித்தியன் முற்றுணர் முதல்வன்;
எல்லாம் வல்லவன் எம்பிரான் இறைவன்,
அல்லா யஹோவா அரியரன் அகூரன்
பரம்பொரு ளவனே, பாரெலா மவனே,
சிரம்பொரு ளவனே சிந்தைசெய் மனமே.
சிற்றுல கத்தின் பற்றற முற்றும்
பற்றற் றானைப் பற்றுக மனமே.
வீட்டுள் ளிருட்டை வெருட்டினாற் போமோ?
ஓட்டினாற் போமோ? ஒளியினாற் போகும்.

## உலகரங்கிற் பெரியாநல்வல்

செத்தோர் தமையே செகங்கொண் டாடும்.
உத்தமர் மோனத் துறைகுனர் பலரே.
வாழ்வொரு நாடக மன்றமே போலும்;
ஆழ்வினை யாடற் கமைந்தனன் மனிதன்.
வினையறிந் தாற்றின் விடுதலை பெறலாம்.
வினைக்கட் டில்லார் விழுமிய பெரியார்.
தன்வினை கண்டு தானதிற் பற்றி
முன்வந் தாடி முடிந்தனர் சிலபேர்.
நாடக மெழுதவோர் நற்கதை காட்டி
ஓடினர் சிலபேர் உரைபே சாமல்.

மோனம் வகித்து மோனத் தெழுந்த
ஞானந் தன்னை ஞாலம் வாழத்
தனிமையி னின்றே யினிமையா யெழுதி
மனிதருக் கீந்து மறைந்தனர் சிலபேர்.
தன்னை யறிந்து தவக்கனல் விரித்துத்
தன்னறி யன்பர் தத்துவ முணர,
யோக சக்தியா லுரையா டாமல்
தாகந் தணித்தே யேகினர் சிலபேர்.
கடவுட் கலப்பிற் சுடர்விரிந் தோங்கி.
யுடல்கொண் டுலகில் உலவினர் சிலபேர்.
இவ்வா றப்பனே எண்ணறு பெரியோர்
எவ்வெவ் வாறிங் கியங்கினர் காணாய்.
கடலுள் முத்தெனக் கரந்துளார் பலபேர்.
படலிற் கொடியெனப் படர்ந்தனர் சிலபேர்:
இன்பங் கண்டுள் ளின்ப மளிக்கவே
அன்பே வடிவா யருட்பெரி யார்கள்,
முன்பு நின்றும் மூடர் காணார்.
பின்பு புகழ்ந்து பேரிகை யடிப்பர்.
பாரா யப்பனே பகலவ னழகை;
ஓர்பொரு ளதுபோ லுலகினி லுண்டோ?
அதுவே யுலகிற் கான்ம விளக்கம்.
பொதுவா யார்க்கும் பொலிவது காணாய்.
இதுபோற் பெரியா ரிலகுவ ருலகில்;
எதுவும் பற்று தியல்பா யிருப்பர்.

உலகியற் கொடுமை.

உண்டுடுத் திட்டி யூடிக் கூடிப்
பெண்டிரைக் கெடுத்துப் பெண்ணாற் கெட்டுப்

பொன்னே பொருளே போகமே சுகமே
என்னு முலகம் இனிதுரைப் பாரை
நடத்திய கொடுமை நவிலப் போமோ?
தடித்தபாழ் மடமைத் தடிகொள் உலகம்
சுத்தமுஞ் சோதித் தொழுகையும் ஆன்ம
தத்துவ முரைத்த ஜாரதுட் டிரனைச்
செவிட்டி லடித்துச் செகுத்தது வாளால்.
தெவிட்டா தின்று செய்குது போற்றி.
மாசறு மெய்யன் பேசரு மன்பன்
ஏசுவைச் சிலுவை யேற்றிய துலகம்.
காட்டு மிராண்டிக் காப்பிரி யர்க்குக்
காட்டி யிரக்கம் கடவுளன் புறுதியைச்
சொல்லி வந்த துகளறு நபியைக்
கல்லா லடித்தது கக்கிடச் செந்நீர்.
கண்ண னன்பிற் கரைந்த நிமையின்
உண்மைச் சிடனை யுடைத்தது மண்டை.
ஞான முரைத்த நானகன் றன்னை
ஏனிப் பைத்தியம் இருக்குதென் றேசினர்.
பொங்குவே தாந்தச் சிங்கமா யெழுந்த
சங்கர னைவிடந் தந்துகொன் றனரே.
கல்லை நம்பிக் கடவுளை மறந்து
வல்வினை பெருக்கி மடமையி லாழ்ந்து,
சாதிச் சண்டையுஞ் சாத்திர வசந்தையும்
பேத புத்தியும் பிடித்தலை யுலகில்,
வேதம் விளக்கி, வீரம் புகுத்தி,
சாதிப் பித்தர் தணியப் பணிசெய்
தயவே வடிவாந் தயானந் தனையும்
சயவர் நஞ்சு கலந்து கொன்றனர்.

பரம ஹம்ஸனைப் பயித்திய மென்றனர்.
அருமை யாகும் அருட்பிர காசனைப்
பண்டிதச் செருக்குப் பழித்தது சிறிதோ.
விண்டிதன் கொடுமை விளம்பவும் போமோ.
குணக்குன் றன கொன்புத் ஸன்னை
நிணக்குன் றன நெட்டுயிர்ப் பகைவர்
குண்டுணிக் கோளுங் குத்திரச் சூட்டியுங்
கொண்டு செய்த கொடுமைகள் சிறிதோ!
அடைக்கல முரைத்த வுடையவர் சீடனை
வெடுக்கெனக் கண்ணைப் பிடுங்கின னொருமன்
தானே தானும் சதாசிவ பிரமம்
மோனமாய்ப் போமுழி முரட னொருவன்
‡தாளா தாடை தரிக்காத் தன்மை,
வாளால் வீசி வலக்கை தறித்தான்.
பார்நலம் பேசிய பாபெனும் மஹானைக்
கோரமாய்ச் சுட்டுக் கொன்றதிவ் வுலகம்.
வாழ்வெலா நாட்டின் வேள்விய தாக்கி
நாளெலாம் எளியர் நலஞ்செய் விரதம்
கொண்ட காந்தியாங் குணக்கட லானையும்
குண்டாற் கொல்லக் குறித்தனர் கொடியர்.

## தீயரியல்பு.

தன்னலம் போற்றித் தமியரை யிகழ்வர்.
பொன்னலம் போற்றிப் புகமுரை சொல்வர்.
கணப்பி ருந்தால் அணைப்புட னிருப்பர்.

---

‡ நிரவாணத்தைக் கண்டுதாளாது.

* Bab.

பணப்பை யவிழ்த்தாற் பல்லை யிளிப்பர்.
முகத்துதி பேசி முடிச்சை யவிழ்ப்பர்.
சகப்புரட் டுகளைச் சரடு திரிப்பர்.
மயங்கியோன் முகத்தில் மசகைப் பூசுவர்.
தயங்கிய சமயந் தலையி லடிப்பர்.

கனிபோற் பேசிக் காரியம் பார்ப்பர்.
எனதென தென்னும் இறுமாப் பாலே,
கைக்கோல் கொண்டு கருணையைப் புடைப்பர்.
வைக்கோல் காத்த வரள்நாய் போல்வர்.
கொடுக்கு மட்டுங் குளிர்முகங் காட்டுவர்;
கொடுத்ததைக் கேட்டாற் கொடுக்கைக் காட்டுவர்
ஆமாம் என்றே யாடுவர் முன்னே;
போம்போ மென்றே பொரிகுவர் பின்னே;
வேலை வாங்கக் காலைப் பிடிப்பர்.
கூலி கொடுக்கக் கூக்குர லிடுவர்.

நாவிற் சரி சரி நடத்தை வழவழாஅ.
பாவிற் சரிதான் பயனிலே தொள தொளா!
தமக்கு மேலுள தலைவனை யெண்ணார்.
சமைக்குஞ் சோறுயிர்ச் சாபப் பொங்கல்.
உயிர்க்குயி ராக வுள்ளவ னெண்ணார்.
உயிர்களை யறுத்து வயிற்றிற் புதைப்பர்
மனிதரை மனிதர் மற் செய் தறுப்பர்.
சனியன் பிடித்த சகத்தின ரிணையார்.
ஒருவரை யொருவ ருண்ணக் கருதி
இருவரு மின்னே ரெமன்வாய்ப் படுவர்.

இருட்குல வுலகின் இயல்பிது வாகும்.
அருட்சுட ரெழுந்தால், அனைத்துந் திருந்தும்.

௫௫.

## உன்னை நீ திருத்து.

வாயாற் பேசி வளைக்க முடிந்தோர்
நாயின் வாலை நன்றாய் நிமிர்த்துக.
உலகைப்படைத்தோ னுலகைத்திருத்துவான்
பலவா றுன்னைப் பார்த்துத் திருத்து.
நீ விளக் கானால் நின்னொளி யுலகில்
தாவிப் பரந்து தானாய்ப் பயன்படும்.
தீதும் நலனுந் திரண்ட வுலகில்
வாதம் பேசி மாண்டார் பலபேர்.
தாந்தாந் திருந்தினாற் சகமுந் திருந்தும்.
மாந்தரைத் திருத்துமுன் மனத்தைத்திருத்து.
அச்சங் காட்டி யாணவச் செருக்கால்
பிச்சை மாந்தர் முன் பெருக்கப் பேசி,
அகமடக் காத ஜகப்புரட் டர்கள்
சுகமடை யாது துஞ்சினர் பலபேர்.

## சொரூப வணக்கம்.

யாவ ருள்ளும் யாங்க ணு முணர்வாய்
மேவிய சக்தி வேந்தனை நம்பு.
நாற்ற வுடலம் நாளையே மண்ணாம்.
போற்றுக வுள்ளே பொன்றா வொன்றை.
என்னைக் காணா யிவ்வுடல் காணின்.
என்னைக் காணி னிவ்வுடல் காணாய்.
“இன்ப வழியை யென்னுளே முயன்றே
அன்பனே யிவ்வா றடைந்தனன் காணாய்!
உன்னுளே நிலையா யுள்ளதவ் வின்பம்

பொன்னுளே பொதிந்த புதையலைப் போலே;
இவ்வழி நீயும் என் போ லடைதி.
உய்வழி யிதுவென்'' றுரைப்போன் ஸத்குரு.

## பிரமாண்டம்.

விண்ணி லெத்தனை வியன்மீன் கூட்டம்!
அன்னை யருளின் அம்மனை யாட்டம்.
எண்ணப் போமோ! எழுதப் போமோ!
கண்ணினாற் கண்டு கணிக்கப் போமோ!
ஒவ்வொரு மீனு மொவ்வொரு சூரியன்.
அவ்வவைச் சுற்றி யாங்கா ணாபல
கோளமெத் தனையோ குடுகுடென் றுருளும்.
கேளாய் மகனே, கிளர்மீன் குழுவில்
நம்முன் விளங்கு ஞாயிறு மொன்றாம்.
அம்மணி சுற்றி யலைவன கோள்கள்:
அக்கோட் குழுவி லாருல கொன்று.
அக்கண் ணுலகி லாருயி ரனந்தம்.
அவற்றுள் மனிதனோர் அற்பப் பிராணி.
சவத்துள்ளே புகுந்த சத்துசித் தாட்டம்.
இத்தனை யுலகும் இத்தனைக் கதிர்களும்,
சக்தி யொன்று தாங்குத லறிவாய்.
அந்த சக்தியே யருட் சிவ மாகும்
அந்த சக்தியே அல்லா யகோவா
அந்த சக்தியே அரனயன் திருமால்
அந்த சக்தியே யாவையு மாகும்.
அந்த சக்தி யாண்டவ னென்பர்.
அந்த சக்தியே யாவற் றுள்ளும்.

அந்த சக்தி யடியே னுள்ளும்.
அந்த சக்தி யப்பனே யுன்னுளும்.
ஆதலால் மகனே அந்த சக்தியைத்
தீதற மனதிலே தியானஞ் செய் செய்.
ஆரா யப்பனே அரிய வுதாரணம்:—

## இறைவனைப் பணிக.

ஒரு ரரசன்; ஒளிமணி மாடம்;
சித்திரக் கூடம், சிங்காரத் தோட்டம்.
எத்தனை மாளிகை யெழுப்பு கின்றான்;
அதனுள் விலங்குக ளாயிரம் வகைகள்.
விதவித மான விளைகனி மரங்கள்.
கணிக்கரும் போகக் கட்டழ கின்பம்.
அணியணி யாக மணித்திருப் பாவையர்.
தத்தா, தைத்தா ததிங்கிணத் தோமெனக்
கத்துங் கிண்கிணிக் கால்நடம் புரியும்;
பாட்டு வேகம் பாய்ந்து பறக்கும்.
காட்டும் வித்தைகள் கண்ணைக் கவரும்.
இத்தனை யாளியும் எவருக் கெதனால்?
அத்தனை யும்மோ ரரசனுக் கரசால்.
அரசன் முன்னிலை யன்பை வேண்டுவோர்
அரசனை நம்பி யடைந்திட முயல்க.
வாயற் சேவகன் வழியைக் காட்டுவான்.
வாயற் கடந்து வழியே காமல்
வாயற் காரனை வணங்கிக்கிடந்தால்,
மாயக் காலம் மன்னனைக் காட்டுமா?
அப்பனே யதுபோல் அகிலமா ளிகையில்

இப்பால் லுயிர்களுக் கிறைவ ளொருவனை
எவ்விடை யீடு மின்றி யவரவர்க்
கொவ்விய வாறே யுணர்வா லடையலாம்.
என்னைப் பணியே லிறைவனைப் பணிகெனச்
சொன்ன முகம்மதின் சொல்லமு தாகும்.
சன்மார்க் கத்தீர் சற்றெனக் கேண்மின்,
என்னடி விழன்மின்; இறையடி பணிமின்;
என்ற வள்ளலின் இன்னுரை யமுதம்.
ஒன்றே தெய்வம்; ஒரு குலம் மக்கள்;
என்ற வுண்மை யெவர்க்கும் பொதுவாம்.

## *ஆதாரம்.

மூலா தாரம் முதலடிப் படையாம்.
சுவா திட்டானம் சுற்றுத் திண்ணை.
மணிபூ ரகமே மண்டப முதலாம்.
அனகத மாகும் அதன்மேற் கூறை.
விசுத்தி யாகும் விமலமாம் மாடி.
ஆக்கினை யாகும் அதன்மேன் மாடி.
அதன்மே ||லாயிரம் அழகிதழ் மலர்மேல்,
புதுவீ டொன்று பொலியுந் துரியம்.
அதுவே மாடத் தமர்ந்த கூடமாம்.
அதன்மே லுள்ள தகண்டப் பால்வெளி.
அதுவே துரியா தீதமாம் விண்ணே.
அதிற்கலந் தாலே யானந் தத்துயில்.

---

*இந்த ஆதாரங்கள் யோகசித்தி 11-வது இயலில் விளக்கப் பட்டுள்ளன.

||ஸஹஸ்ராரம்.

## சகவாசம்.

இதய மன்றில் இருப்பிட முனக்கே.
எதிலே நிலைப்போ அதுவாம் இதயம்,
குரங்கொடு சேர்ந்தாற் குட்டிக் கரணம்.
கறங்கொடு சேர்ந்தாற் கருத்தும் அலையும்.
வேடன் வளர்கிளி வேட்டை பேசும்.
வேதியன் வளர்ப்பது வேதம் பேசும்.
ஏதே தெங்கே யியல்பது வாகும்.
யந்திரம் வேண்டின் யந்திரப் பயனும்.
மந்திரம் வேண்டின் மந்திரப் பயனும்.
இறைவனை வேண்டின் இன்பமே பயனும்.
நிறைகளிப் பாவதுநிறைபொருட் கலப்பே.

## ஜீவயாத்திரை.

உயிர்போம் வழியை யுரைக்கக் கேளாய்:—
அயர்ந்துடல் வீழ்ந்ததும் ஆவி துடிக்கும்.
நாடிக ளொடுங்கி நாத மடங்கும்;
வீடுவிட் டோட விரைந்து பொறிபுலன்,
அந்தக் கரணம், அடங்கலும் மூட்டை
விந்தையாய்க் கட்டிச் சிந்தனை மனது
உள்ளக் கூடத் துறக்கலந் திருக்கும்.
கள்ள நாடகம் கணக்கில நடக்கும்.
அங்கே நாடக மாடுவ தெல்லாம்
சங்கற் பங்களின் சங்குல மனமே.
சித்தந் தன்னிற் சித்திர குப்தம்
கத்தை கத்தையாய்க் கட்டவிழ்ந் தெதிரும்.
அஞ்சும் போது துன்னிய வாறே

எஞ்சும் பிறவி யெய்துவ துறுதி.
சித்திர குப்தச் சித்திர மெதனிற்
சுற்றும் மனது சுருக்கெனப் பாயுமோ,
அத்தகைப் பிறவி யடைவ துறுதி.
மற்றதற் கேற்ப மனைவிடும் ஜீவன்;
விஞ்ஞா னிக்கு விழிவழி போகும்.
அஞ்ஞா னிகளுக் காசன முதலாம்
ஏனை வழிகளி லேகும்; சிரவழி
ஊனை விட்ட வுபாசகர் மீளார்;
ஒன்பா னோட்டை யுடலை விடுத்துத்
தென்பாற் செல்லும் ஜீவ னெட்டுநாள்,
ஆங்கே சுற்றும்; அதன்பிற கேகித்
தான்கரு தடலைத் தாவிப் பற்றும்.
ஐயா போனையா! அப்பா போனையா!
ஐயை யோவென் றடித்தழு மடமை
வேண்டாம் வேண்டாம் வியனுல கத்திர்!
ஆண்டானிச்சையேன் றமைதியா யிருமின்.

## அருள்.

அச்ச மின்மை. அஹிம்ஸை, யன்பருள்,
மிச்சை யின்மை, வெளிமயக் கின்மை,
ஆசை வெறிகள் அற்றுநல் லான்மா
பாசறு தேவ வாழ்வினை யெய்தும்.
ஆணவ மாயை யாசைகள் வற்றக்
காணுங் காணுக் காட்சிக ளெல்லாம்.
அமரர் தமக்கும் ஆணவ மிருக்கும்.
விமல பானபின் விமலனைச் சேர்வர்.

அரனே விஞ்ஞா னிகளுக் கருள்வான்.
குருவா யருள்வான் பிரளயா கலர்க்கு.
சகலர் குருவைச் சார்ந்தருள் பெறுவர்.
அகநா யகனே யருணெறிக் கிறைவன்.
அவனரு ளாலே யவனறி வாகும்,
அவனறி வாலே யவன்கலப் புண்டாம்.
அவன்கலப் பாலே யவன்மய மாவர்.
அவன்மய மானோர் அருளுடல் பெருவர்.
அப்பனே யென்றன் அன்புப் பிஞ்சே
செப்பிய வுரைகளைச் சிந்தித் தறிவாய்

## அன்பு.

உண்மை யன்பர்க் குயிரையுந் தரலாம்
உண்மை யன்பால் உலகையும் வெல்லலாம்.
அன்பை வளராய். அன்புனை வளர்க்கும்.
அன்பே கடவுள்! அன்பே யின்பம்.
உண்மை யன்பன் உலகினு மரிதாம்;
உண்மைக் காதல் உலகினும் பெரிதாம்.

## சாதனம்.

அன்பனே கேளாய், அனுபவச் சுருக்கம்:—
இன்ப மென்ப திறைவ னென்றே!
எல்லா வுயிர்களும் இறைவனைப் பணிக.
உள்ளா னுயிர்களி னுள்ளத் தவனே.
தினந்தின மொருமணி தியானத் தாலே
மனந்தனை யடக்கி மாசற நின்றால்.
உன்னுள் ளத்தே யுள்ளவ னொளிர்வான்.
உன்னுள் ளவனை யுணர்ந்து காணுக;
நோக்க மென்னு நோக்கா நோக்காற்

பார்க்கு மிடந்தொறும் பார்க்கலா மவனே.
பிறகே வேற்றுமைப் பீடைக ளொழியும்.
பிறகே யின்பம் பிறந்திடும் முறுதி.
அன்பனே கடவுள் அருள்வடி வாகும்.
உன்பளிங் குளத்திலோர் உணர்வாய்க் காணும்.
விருவிரென் றுணர்வு வேகமாய்ப் பாயும்
திருவுணர் வோடு திகழுமோர் சோதி.
அவ்வருட் சோதிக் கறிகுறி யாகவே
துவ்வெண் ணீறு துதைத்தனர் மேலோர்.
பிறகுள் ளிருந்தே பிறக்கு மறிவு.
அறிவையே பற்றிடி னறிவா யிருப்பாய்
அவ்வறி வாலே யனைத்தையுங் கண்டால்,
எவ்வித பேதமு மிருக்கா துலகில்.
இப்போ தொருவரை யெதிரே கண்டால்,
தொப்பையைப் பார்ப்பாய்; தோலைப்பார்ப்பாய்
குட்டை நெட்டை குறுகிய மூக்கு,
கட்டை செவ்வல் கருவல் மாநிறம்,
மறவன் முதலி வடுகன் பார்ப்பான்
குறவன் நந்தன் குலமிவ னென்பாய்
இந்தியன் வெள்ளையன் இஸ்லா மியனிவன்
சொந்தம் நேற்று வந்தவ னென் பாய்.
சொல்லு மிவையெலாந் தோல்வேற் றுமையே
எல்லாம் மனத்தின் இருவி காரமாம்.
உணர்ச்சி யுற்றபின் உலகெலாங் கோயில்.
உணர்ச்சியா லுயிர்களி * லுயிர்க்குயி ருணர்வாம்.
அப்போ தொருவரை யனுகப் பார்க்கின்.
இப்போதிவரார்? இவ்வுட லில்லை;

*உயிர்க்குயிரான கடவுள்.

இவ்வுட லுக்குள் ளிருக்குதோர் ஆன்மா;
அவ்வான் மாவால் ஆடுதிப் பாவை;
அதன்மே லிப்பெண் ணுணுருக் கற்பினை;
அதன்மேற் குலப்வகை யனைத்துங் கற்பனை
நான்காண் மனிதன் நானில தில்லை;
ஆன்மா நானே: ஆன்மா அவனே;
ஆவிக் குயிராய் அடியனுட் கலந்தான்,
ஆவிக் குயிராய் அவனுளு முள்ளான்;
இவ்வுயிர் போலே யவ்வுயி ரேனதே.
எவ்வித பேதமும் இல்லையேன் றறிவாய்.
பார்க்குந் திசையெலா நீக்கற நிற்போன்.
யார்க்கும் பொது நிலை யமர்ந்தா னுள்ளம்.
உடலைப் பார்த்தா லுண்டாம் விகாரம்.
உடையா னுணர்வா லொன்றே புலனும்.
இந்தவோர் பொருளை எனைத்திலுங் காணின்
சொந்த மன்னியந் தோன்றுமோ மனமே!
சாதிச் சமயச் சழக்குக ளிருக்குமோ?
பேத புத்தியின் பிழைக ளிருக்குமோ?
அன்றே வேற்றுமை யற்றுல கெல்லாம்
உண்டா மான்மா வொருப்பாட் டுரிமை.
ஓர்பெரு மான்ம ஒற்றுமை யின்றிச்
சீர்திருத் தங்கள் செய்குனர் மாந்தர்.
ஊனுடைச் சண்டை, யொற்றுமைச் சண்டை!
ஆண்பெண் சண்டை! யடுக்குட் சண்டை!
உள்ளறி யாத வுலக மாயம்!
உள்ளொன் றுனல் உலகொன் றுகும்.
உள்ளொற் றுமையா லுலகொற் றுமையாம்,

## ஆத்மானுபூதி.

ஆன்மா என்பதி யாதெனக் கேட்டாய்.
பான்மை யுரைப்பேன் பார்த்தா லதுநீ.
சற்றிவ் வுடலைச் சாம்பின மாக்குகேன்:—
உற்றுப் பாராய் உறுப்பெலாஞ் சரியே:
மூக்கதற் குள்ளது மூச்சு விடுமோ?
நாக்கதற் குள்ளது நற்சுவை யறியுமோ?
கண்ணதற் குள்ளது காணுமோ வுன்னை.
பண்ணொலி கேட்குமோ பரந்த செவிகள்?
மண்டை யுள்ளது மனனஞ் செய்யுமோ?
தொண்டை யுள்ளது தொனி யெடுக்குமோ?
முற்று மில்லை மூச்சுப் பேச்சிலை;
சற்றுமுன் னிந்தச் சவத்தி னுள்ளே,
மூச்சு விட்டதும், பேச்சி விரித்ததும்,
ஒச்சிக் கையை ஒய்யா ரமதாய்
நடந்ததும் பார்த்ததும் நான்நா னெனமனம்
உடைந்ததும் உகந்ததும் உற்றறி; யாரது?
இதயந் துடிக்கின் இயந்திரம் நடக்கும்;
இதய மயர்ந்தால் இயந்திரம் பிணமாம்,
அதிலொரு சூட்சுமம் அசைக்குதிக் கூட்டை
அதுவே ஜீவன் அதுவே யான்மா!
அதனுணர் வாலே ஐம்பொறி யுணரும்
அதனால் மூளைக் கறிந்திட வொண்ணும்;
அப்பனே நீயின் றயர்ந்து தூங்குழி
சொற்பனங் காணுஞ் சூக்கும மெதுசொல்!
கட்டைக் கிந்தக் கனவுக ளுண்டோ?
திட்டமா யுள்ளே திரிகுதோர் மனது.
யாங்கிம் மனமெழு மாங்கே யான்மா.

உன்னான் மாவை யொளித்திடும் மனமே.
அன்னதை யடக்கினால் அமைதிவீ டாகும்.

## ஒழுக்கம்.

அச்ச மருளை யழுக்கா றகந்தை
துச்ச மான தூறுகள் வேண்டா.
மனிதர் தங்கள் மனச்சான் றின்படி
இனிது நடந்தால் இடரிங் கில்லை.
பூசி னாலும் பூசா விடினும்
நேசத் தாலே நெஞ்சைத் தொட்டிரு.
ஆலயம் புகினும் அல்லா விடினும்
ஞாலால யத்து ஞாயிரைக் காணே.
அதுபோ லறிவொளி யான்மா யார்க்கும்.
பொதுவுற வுள்ளே பொலிவதென் றுணராய்.
உயிரிற் கலந்த வொருவனைக் கண்டால்,
உயிர்க்குல மனத்தினு முயிர்ப்பவ னவனும்.
மனத்திற் கலந்த மதியினைக் கண்டால்,
மனத்தை யியக்கு மதியவ னாகும்.
பாலினுந் தேனினும் பருப்பினு மினியாய்,
பாவினிப் பறிபவன் பாராய்; யாரவன்?
யானென் கின்றாய்; யானார் சொல்லாய்?
யானிவ் வுடலிலை யானிவ் வுயிர்ப்பிலை
யானோ ரான்மா, ஊனா ருடலெலாம்,
தானா யிருக்குந் தன்மை யதுவே.
கண்ணிற் கலந்த கண்மணி கண்டால்,
கண்காண் பொருளிற் *காண்பான் புலனும்.
யானே யனைத்துளும் யானவை யுமென்னுள்.

*கடவுள்.

யானே யென்பதெங் கோனே வேறிலை.
அவனினு மன்னியம் யாங்கணு மில்லை.
அவனையே வணங்க யாங்கணு மவனே.
இச்சம நோக்கே எவர்க்கு மினிதாம்.
அச்ச மகந்த் யங்ஙனே யடங்கும்.

## அடைக்கலம்.

உள்ளந் தன்னி லூன்றிய திருவடிக்(கு)
அள்ளித் தன்னை யளித்த லடைக்கலம்.
கடலினி லாறு கலப்பது போலே
உடையா னுடனே யொன்றுத லடைக்கலம்.
கண்ணவன் கண்ணாய்க் கருத்தவன் கருத்தாய்ப்
பண்ணுவ தவன்பணி; பகருவ தவனுரை.
அனைத்திலு மவனரு ளாணையி னிற்றலே
தினைத்துணைப் பேதமுந் தீர்ந்தா லடைக்கலம்
அத்தகை யடைக்கலம் அன்பினின் றெழுந்தால்,
அத்த னாணையை மெத்தநன் கறியலாம்.
பிள்ளைபோ லுன்னைப் பிரான்கை தந்திடு.
பிள்ளைபோ லுன்னைப் பேணி வளர்ப்பான்,
நீக்கமற் றெங்கினு நிற்பவ னவனும்.
தாக்கற் றவனை நீக்கறக் கலந்திடும்
அந்நிலை யிருப்பின் அதுவே யடைக்கலம்.
இந்நிலை வந்தால் எல்லா மின்பம்;
செப்பி யுறுத்துந் திறமையிவ் வளவே.
அப்பனே யிவற்றை யாராய்ந் துணர்வாய்.

## பூரணம்.

இன்புற வாரீர், இயங்குங் கோயில்காள் !
அன்பை வளர்ப்போம், அன்பே கடவுள்.
சாதி சமயச் சண்டைகள் வேண்டா!
மாதரு மாந்தருந் தீதற வாழலாம்.
அறிவையுள் ளடைவாம். அறிவே யான்மா.
அறிவால் வாழ்வை யழகு செய்வாம்.
அவரவ ருள்ளமே யன்பு நிலயம். 1060
அவரவ ருள்ளமே யானந்த் ஊற்றும்.
ஒவ்வோ ருயிரும் உலவுங் கோயில்.
எவ்வெவ ருள்ளும் இருப்பதோர் ஆன்மா.
மோன மாக வுள்ளத் தாழ்ந்து,
தியானஞ் செய்க தினஞ்சில நாழிகை.
அமைதி பிறக்கும்; ஆன்மா புலனும்.
தமவிரு ளகலும். சக்திபாய்ந் தொளிரும்.
உலக வாழ்க்கையும் உயர்தவ யோகமாம்.
நலமெலாம் ஓங்கு நல்வழி யிதுவே.
மெய்ப்பொரு ளறிக! விண்ணமு துண்க !1072
தெய்வ நிலைக்குத் தினந்தின முயர்க!
பூரணம் பெறுக! பூரணம் பொழிக!
பாருயி ரின்பப் பாலூற் றுருக!
எல்லா வுலகிற் கிறைவ னொருவன்.
எல்லா வுடலு மிறைவனு லயமே! 1075

# இன்பமாலை

## ஸமரஸ விண்ணப்பம்.

மெய்தாங்கி யுலவுகின்ற கடவுளர்காள், 1
மெத்தவுமென் வணக்கங் கொள்வீர்!
பொய்தாங்கு வேற்றுமைகள் கட்டோடும்
ஒழிக! அருட் போதுமை வாழ்க!
துய்தான வொருகுலமும் சுத்தசன்ம ஸமரஸமுந்
துலக்குகின்றேன்:
வைதாலுந் தமிழினிலே வையுங்கள்!
வாழ்த்தெனக்கொண் டியம்புகின்றேன்.

சாதிமத பேதங்கள் யாவிற்குஞ் 2
சாவுமணி யடிப்போம்! விண்ணில்
ஆதித்தன் எழுந்தபொழு ததற்குவழி
யமைந்ததுபோல், மதிம யக்கால்
வாதித்த வகுப்பினர்கள் வருமுன்பே,
வேதங்கள் வழுத்து முன்பே,
யாதிற்கும் பொதுவான இயற்கை யறம்
இருந்த ததற் கிசைந்து வாழ்வோம்!

சத்தியத்தை யறிந்திடுமின்! சமயவல்லறைச் 3
சண்டைகளை யொழிமின்! உள்ளே
நித்தியத்தை வைத்துலவுந் திருக்கோயில்
எனவுயிரை நினைமின்! யாரும்
ஒத்திநில்லென் றுரைக்கன்மின்! உயர்ச்சாதி
கீழ்ச்சாதித் திரைக ளெல்லாம்
பொத்துவிழக் கிழித்தெறிமின்! பொதுமன்றிற்
சுதந்திரமாய்ப் பொருந்தி வாழ்மின்!

யாரொருவன் பிராமணனென் றிருமாப்பான் 4
அவன்கால மாயிற் றென்போம்.
யாரொருவன் கீழ்வகுப்பென் றுரைத்திடுவான்
அவனறிவைத் தூண்டி யெங்கும்
பாரப்பா வோரான்மா பலவுடலம்
பூண்டுலவும் பான்மை யென்போம்;
சேரப்பார்ப் போமுலகு; பிரிவினையைச்
சிந்தையிலும் பிரிந்து வாழ்வோம்.

சித்தாந்த வேதாந்தச் செம்மல்காள், 5
சீக்கியர்காள், பார்ஸியர்காள்,
புத்தர்காள் ஜைனர்காள், முஸ்லீம்காள்,
கிறிஸ்தவர்காள், பௌதிகர்காள்,
சக்தர்காள் வாருங்கள்! எல்லாரும்
ஸமரஸ சுத் தான்ம சங்கம்;
ஒத்த வொரு குலமாகி அரியபணி
செய்துலகில் ஓங்குவோமால்!

சைவர்காள் வைணவர்காள் சாக்தர்காள்! 6
சமரஸஸன் மார்க்கத் தீர்காள்,

வையகத்தில் ஆண்பெண்ணாய் வந்தவர்காள்!
யாவர்க்கும் ஆன்மா வொன்றே!
மெய்யிதனை யவரவர்தொட் டுள்ளுணர்மின்!
வேறுபுற வேடங் கொண்டு
பொய்கட்டிப் போராடிப் பொழுதிழந்து
போகன்மின்! பொருந்தி வாழ்மின்!

பந்தமறுத் தோன்புத்தன்; புலன்வென்றோ 7
னே ஜைனன்; பரிவு கொண்ட
சிந்தையுளோன் கிறித்தவனும்; தெய்வத்தி
லுறுதியுளோன் செய்ய முஸ்லிம்;
எந்தவுயிர்க் கும்மினியன் அந்தணனும்;
இழுக்கற்றோன் ஜார துஷ்ட்ரன்;
முந்துலக மான்மமய மெனவுணர்ந்தோன்
வேதாந்த முத்த னமே!

யாரொருவ னுயிர்களெல்லாங் கோயிலெனப் 8
பணிசெய்வான் அவனே சைவன்;
பாரெல்லாங் கடவுளெனப் பணிபவனே
வைணவனும்; படைப்பி னங்கள்
ஓர்சக்தி விளையாட்டா யுணர்பவனே
சக்தனும்; இயற்கை யாலே
நேரான வுலகமெனநினைப்பவனே
பௌதிகனும்; நிகரின் னோரே!

மானிடர்காள் சிந்தியுங்கள்! சாதிமத 9
வேடங்கள் வருமு னெங்குந்
தானான தன்மயமா யிருந்தது சுத்
தான்மவொளி ஜீவசாட்சி;

நான்சொன்ன படிநட நீ நலம்பெறுவாய்
என்ற துள்ளே;—நலியா வுண்மை.
எனிடர்கள்? மக்களற மொன்றெங்கும்
அதனையெடுத் தியப்பு வேனல்!

தெய்வத்தை நம்புங்கள்! நம்பாதார் 10
இயற்கையினைச் சிந்தி யுங்கள்!
வையத்தை ஒருசக்தி வைத்தாளும்
வாய்மையினை மறுக்கொண் ணாதே!
பொய்வித்தை நம்பாதீர்; பொறுமை யருள்
அன்புண்மை புனித வாழ்க்கை
செய்சுத்த முத்தஸம ரஸசித்தி
சேர்ந்தினிது சேர்ந்து வாழீர்!

ஒற்றுமையைச் சிதைப்பதெல்லாம் பகையென்ன 11
ஒதுக்கிடுமின்; மாய வித்தை
கற்றுமயக் கிடுஞ்சூது வாதுகளைக்
களைந்தெறிமின்! காத லுண்மை
பற்றிமணந் தொருகுலமாய்ப் பழுதற்று
வாழ்ந்திடுமின்! பாரீ ரிங்கு
வெற்றுரைகள் பேசாமல் வீரர்களாய்த்
தேவர்களாய் விளங்க வம்மின்!

பரிதியொளிர் விண்பரவும் பாரேகம் 12
ஆலயமாம்: படைப்பி னங்கள்
ஒருசக்தி யிறைவனருட் டிருமேனி
எல்லாரும் ஒன்றே; யிங்கு
புரிபணியொன் றெவ்வுயிர்க்கும் உள்ளதனைப்
புரிந்தாரே முத்தி யெய்வார்;

வருவதுபோ வதுமுடலம்; சுத்தான்மா
மாருத வாய்மை யாமே!

என்னருமைச் சோதரரே யென்னுயிரை 13
யும்மிடமே யினிது வைத்தேன்;
பன்னுரையைப் பகுத்தறிந்து பற்றுங்கள்!
பழுதிருந்தாற் பரிவு கூர்ந்தே
இன்னதுநன் றல்லவெனத் திருத்துங்கள்!
எல்லாரும் எனக்கா சார்கள்!
முன்னிருக்கும் உயிர்க்குலத்தின் மாணவன்யான்
முடிவணக்கிக் கற்கின் றேனல்!

ஒவ்வொருவ ருள்ளத்து மொளிரான்ம 14
வுண்மையினைத் தூண்ட வேண்டும்.
இவ்வுலகக் கோயிலிலே எல்லாரும்
இன்புறவே வாழவேண்டும்;
வெவ்வடிமை வறுமையிருள் வேற்றுமைகள்
வேரோடு மாய வேண்டும்!
எவ்வெவர்க்குஞ் சமவுரிமை தரவேண்டும்;
இதுவென்ற னார்வ மாமே!

இன்னியற்கை வளஞ்சூழு மிடத்தினிலே 15
யாச்சிரம மிலக்க வேண்டும்.
பன்மதத்தர் அதிற்கூடி ஒருமயத்தைப்
பார்த்துள்ளே பயில வேண்டும்.
தன்னறிவை வளர்த்துசம தருமத்தை
யறிந்துதன தாக்கி, வாழ்வை
முன்னேற்றிச் சுத்தமுத்த சுதந்திரம்பெற்
றேங்கு தவ முயலவேண்டும்,

இந்த அருள் வீட்டருகே யெம்மவரை 16
ஆளாக்கும் இனிய கல்வி
தந்திடவும் அருங்கலைகள் தொழில்வளமை
தழைத்திடவும், அறமேவோர் பேணும்
சுதந்திரமா டங்களுடன் சுகாதார
வீடுகளும் அவற்றைச் சுற்றிப்
பந்திபந்தி யாயன்பர் மனைவாழ்வு
பாலிக்கும் பரிசும் வேண்டும்.

வேளாளர் வாணிபர்கள் தொழிலாளர் 17
உழைப்பாளர், காக்கும் வீரர்,
தாளாளர் யாவருக்குஞ் சரிநிகராய்
உடையுணவு முரிமை வேண்டும்;
நீளான்மத் தொகுப்பான சமுதாய
நெடுங்கரங்க ளாக மாந்தர்
தாழாது முயன்றுநிலம் விண்ணைகத்
தழைத்திட நன் குழைக்க வேண்டும்!

மனிதசக்தி மென்மேலும் வளர்ந்து தெய்வ 18
வாழ்வடைய வேண்டுகின்றேன்!
புனிதமுறப் பூரணம்பெற் றுலகினிலே
பூரணத்தைப் பொழியவேண்டும்!
எனதுனதென் றிருமாக்குஞ் சாதிவெறி
சமயவெறி யொழிந்தெல் லாரும்
இனிதிங்கு வாழவருட் சக்தியையா
னிறைஞ்சுகின்றேன், அறிமின் என்னீர்!

இத்தனையும் எளியேனால் இயலுமோ 19
இயலாதோ—இறைவ னிச்சை;
உத்தமநல் லன்பர்க்கிங் கெடுத்துரைத்தேன்
உள்ளத்தி லுள்ள வாறே.
மெத்த விதைச் சிந்தியுங்கள்; மெல்ல மெல்ல
நல்லபணி விரும்பிச் செய்யச்
சித்தமுட னிருக்கின்றேன், ஜீவ-சிவச்
சேசவனு யுயிர்க்கின் றேனே!

எந்நாளெந் தோழர் குலம் பொதுமன்றில் 20
வாழ்ந்திடுமோ மாந்தருள்ளே
எந்நாள் சுத் தான்மமயங் கண்டதுநான்
எனுமுண்மை யேற்ற மாமோ;
எந்நாளில் மனிதசக்தி தெய்வசக்தி
யெனவளர்ந்து பொலிவதாமோ
அந்நாளே யான்வாழு நன்னாளாம்,
சுத்த சக்தி யருள்க மாதோ!

(சுவாமி சுத்தானந்தபாரதியார் இயற்றிய
இன்பமாலை முற்றிற்று).



# போற்றி!

—

எல்லாரு மின்புறுத லென்னின்ப மாக்கினை
யெனதியா னென்ப தறவே

யென்னுட் கலந்தவா றெங்கிலும் விளங்கினை
யியல்பா யிருந்த படியே!

தொல்லுலக மூன்றனை யாடலாய்த் தோற்றினை;
தோற்றியதை மாற்றி மாற்றித்

தொழில்களென் பதுகோடி சோர்வற வியற்றியுந்
தொழிலறு சமர்த்த னுனைய்!

சொல்லரிய துரியமெய் விண்ணொளிக் கப்பாற்
றுலங்கிடும் வெட்ட வெளியே!

துதிக்கத் துதிக்கத் திதிக்குமுத் தமிழெனச்
சொக்குஞ் சுகப் பெருக்கே!

இல்லையென் பாருளு மிருக்கிறே னிங்கென்று
மெல்லையறு தில்லை யறிவே!

எச்சமய மும்பணிந் தேத்தரிய பொதுநடத்
தெந்தையே, போற்றி, போற்றி!

ஓம்

# தியானப்படம் (விளக்கம்)

இந்நூலின் முகப்புப் படம் தியானத்தி லிருக்கவேண்டிய ஆஸனத்தையும், மனிதருள் உள்ள சக்திநிலயங்களான ஆதார சக்கிரங் களையும் விளக்குகிறது.

உச்சியில், ஆயிரம் இதழ் வெண்டாமரை யான ஸஹஸ்ராரம் குண்டலி சேர்ந்து, சிவ சக்தியாகத் திகழுமிடம். புருவமத்தியில், அஞ் ஞாசக்கிரம் கழுத்தில் விசுத்த சக்கிரம், இதயத் தில் அனுஹத சக்கிரம், தியானிக்கத்தக்க இடம்; வயிற்றில் மணிபூரக சக்கிரம்! அடிவயிற் றில் ஸ்வாதிஷ்டானம் அதற்குக்கீழே மூலா தாரம் குண்டலியிருப்பிடம். இச்சக்கிரங்கள் யோகிகளுக்கு நன்கு புலனுகும். ஒவ்வொன் றும் மலர்ச்சி பெற்றதும், ஒவ்வொரு அற்புத சக்தியைத்தரும். இவற்றின் வழியே இடா பிங்கலா, சுஷும்னு என்னும் மூன்று நாடி கள் செல்லுகின்றன.

# அன்பு நிலய வெளியீடுகள்

## கிடைக்குமிடங்கள்

---

1. **Sjt. A. R. Annamalai,**
   Manager, Anbu Nilayam,
   Ramachandrapuram
   Trichy Dist., S. India.

2. **The South India Saiva Siddhanta Publishing Society Ltd.,**
   Tinnevelly & Madras.

3. **E. M. Gopala Krishna Kone,**
   Book-Sellers. Madura.

4. **The Murugavel Book Dept.,**
   Royapettah, Madras.

5. **M. Natarajan Chettiar,**
   47, Market St.,
   Singapore (S. S.)

6. **Bharati Prachuralayam,**
   High Road,
   Triplicane, Madras.

7. **Messrs. Higginbothams,**
   Railway Station Stalls
   & at Mount Road, Madras.

R